


விரைவில் இந்த அழகான லேபில் ஹார்லிக்ஸ் பாட்டில்களை அலங்கரிக்கும். புதியதோடுகூடவே, பழைய லேபில் ஒட்டப்பட்ட ஹார்லிக்ஸ் பாட்டில்களும் சிறிது காலம் கடைகளில் விற்பனையில் இருந்துவரும்.

**ஹார்லிக்ஸ்** அதிக சக்தி யளிக்கிறது!

JWT HL-2214

# கல்கி
## பொருளடக்கம்

விசுவாவசு ஆனி 13 ★ ஜூன் 27










உன்னைப் பார்க்க மாட்டேன்; உன்னோடு பேச மாட்டேன்

அமெரிக்க உதவி

PK



மலர் 24 ● இதழ் 48

# பிரதமரின் 'திக்விஜயம்'

**ஸ்ரீ** லால்பஹாதுர் அவர்களுடைய கனடா விஜயத்தின் விளைவு என்ன என்பது பற்றி இந்தியப் பத்திரிகைச் சங்கம் (பி. டி. ஐ.) தெளிவாகவும் சுருக்கமாகவும் கூறுவதாவது :

> ''கனடாவுக்கு இந்தியாவின்பாலுள்ள நட்புணர்ச்சி, பல அம்சங்களைப் பட்சபாதமின்றி நோக்கும் அதன் பான்மை, இந்தியாவின் பொருளாதார வளர்ச்சிக்கு உதவ வேண்டுமென்பதில் அந்நாடு கொண்டுள்ள விருப்பம் — இவை குறித்து அழுத்தமான நினைவுகளோடு ஸ்ரீ லால் பஹாதுர் கனடாவிலிருந்து புறப்பட்டார். அதே சமயத்தில், இந்தியாவுக்கு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த பாகிஸ்தான் சச்சரவுகளில் இந்திய சர்க்காரும் மக்களும் சுய பலத்தையே நம்பிக்கொள்ள வேண்டுமென்றும், அமெரிக்கா, கனடா, மேற்கு நாடுகள் இவற்றின் உதவியையோ அநுதாபத்தையோ எதிர்பார்ப்பதற்கில்லை என்றும் லால் பஹாதுர் உணர்ந்திருப்பார்.''

இதைப் படித்தபின் யாரும் பிரதமருடைய அந்நிய விஜயம் பற்றி உற்சாகமாக ஆகாயக்கோட்டை கட்ட மாட்டார்கள். இச்சிறு அறிக்கையில் ஓர் எச்சரிக்கையே உள்ளது. இது முழுச் சித்திரத்தில் ஒரு பாதிதான். மிகுதியையும் பூர்த்தி செய்வோமாயின், இந்தியா — பாகிஸ்தான் சச்சரவில் சோவியத் ருஷியாவும் நம் பக்கம் நிற்காது என்பதைக் காண்போம். ருஷியா ஏதேனும் உதவி புரியுமெனில் அதற்கு மறைமுகமான, அபாயகரமான உள்நோக்க மிருக்கும். பாகிஸ்தான் சச்சரவில் ருஷியாவை நம்பலாம் எனப் பிரதமர் ஏமாந்து போகாதிருக்க வேண்டும்.

சுருங்கச் சொன்னால், நமது அரசாங்கம் எப்படி மேல் நாட்டு வல்லரசுகளின் நெருக்கடி காலத்தில் அவர்களை ஆதரிக்க மறுத்து, 'நடு நிலைமை' என்ற பெயரில் ஒதுங்கி நிற்கிறதோ, அதே போல் நமக்கும் பாகிஸ்தானுக்குமுள்ள சச்சரவில் மேல் நாடுகள், ருஷியா, கீழ் நாடுகள் யாவுமே நமக்கு உதவாமல் 'நடு நிலைமை' வகிக்கும். நாம் மற்றவர்களுக்குச் செய்வதை, அவர்கள் நமக்குத் திருப்பிச் செய்தால் அது தவறு என்று நாம் சொல்ல முடியாதல்லவா ? பாகிஸ்தான் செய்து கொண்டுள்ள ராணுவ ஒப்பந்தங்களின் ஷரத்துக்களைச் சுட்டிக்காட்டுவதாலோ, அந்நிய தளவாடங்களை நமக்கு எதிராகப் பாகிஸ்தான் பிரயோகிப்பதை கோர்ட்டு வாதம் செய்து எதிர்ப்பதாலோ ஆபத்துக் காலத்தில் நமக்கு எவ்வித பலனும் கிடைக்காது. சர்வ தேச ராஜரிகம் என்பது வெறும் நியாயஸ்தல வாதத்தை மட்டும் பொறுத்த விஷயமல்ல; அதில் சமயோசிதமும் விசேஷமாகக் கலந்திருக்க வேண்டும்.

நம்முடைய நிலை இந்த இலட்சணத்தில் இருக்கும் போது ஸ்ரீ லால்பஹாதுர் அவர்கள் வியட்நாம் பிரச்னைக்குத் தருகிற தீர்வுகளைப் பற்றி அதிகம் பேசாமலிருப்பதே சிலாக்கியம். பிறநாடுகளுக்குக் கௌரவமும், மரியாதையும் கொடுத்து யோசனை சொல்ல வேண்டும் என்ற பண்பை விட்டது ஒருபுறமிருக்க, நம்முடைய அண்டைநாடான பாகிஸ்தானோடு பிரச்னை



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி —
பாப்பா
— பாரதியார்

களைத் தீர்த்துக்கொள்ளத் தயாராக இல்லாத நமது சர்க்கார், வியட்நாம் விஷயத்தில் இதோபதேசம் செய்வது பரிகாசத்துக்குரிய தாகும். நம் பிரதமர் எந்த நாடுகளுக்கு உப தேசம் வழங்குகிறாரோ, அந்நாடுகள் தங்கள் போக்கை இந்தியாவின் பிடிவாதத்துடன் ஒப்பிட்டுப் பார்த்தால் நியாயமே அல்லவா?

அமெரிக்காவுக்கு உபதேசம் வழங்கியுள்ள பிரதமர் அந்நாட்டு ஜனாதிபதியின் அழைப்பை ஏற்க மறுத்திருக்கிறார். முன்பு லால்பஹாதூர் அவர்களுடைய பயணத்தைத் தள்ளிப்போடும்படி ஜான்ஸன் அவர்கள் கேட்டுக் கொண்டார் என்பதை மனத்தில் வைத்துக்கொண்டு, இப்போது அவர் அழைத்துள்ள போது, 'இந்திய பார்லிமெண்ட் அச்சமயத்தில் கூடுமாதலால் தாம் அமெரிக்காவுக்கு வருவதற்கில்லை' என்று பிரதமர் கூறியுள்ளார். இது ஓரளவு விவேகம்.

அவர் அந்நிய நிருபர்களிடம் பேசுகையில் இந்தியா வெற்றிகரமாக அந்நியச் செலாவணி சிக்கலைத் தீர்த்துக் கொள்ளும் என்ற நம்பிக்கையை வெளியிட்டிருக்கிறார். இது வரை வாங்கிய அந்நியக் கடன்களைக் கண்ணியமாகத் திருப்பித் தருவதை மறந்து விடாமல்தான் பிரதமர் இப்படிக் கூறுகிறாரா என்பது தெரியவில்லை. இங்கே நமது நிதி மந்திரி ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் அவர்களும் இதே போல் நம்பிக்கை தெரிவித்திருக்கிறார்; நாடு 'திவாலா' ஆகி விடாது என்கிறார். பிரதமரும், நிதிமந்திரியும் எதிர் காலத்தைப் பற்றி இவ்வளவு நன்னம்பிக்கை கொண்டிருப்பது சரிதான். ஆனால் நம்பிக்கைக்கும் நடைமுறைக்கும் தொடர்பு உள்ளதா என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும். இறக்குமதிகளைப் பெருமளவில் குறைத்து விட்டதால் பல பெருந் தொழில்கள் ஸ்தம்பித்துப் போகுமென்பதையும், இவற்றின் உற்பத்தி உயர்வைப் பொறுத்துத்தான் அந்நியச் செலாவணி நெருக்கடி தீரும் என்பதையும் மறப்பதற்கில்லை. எந்தப் பொருளாதார அறிக்கையைப் பார்த்தாலும் செலாவணிச் சிக்கல் மிகவும் முற்றித் தீவிர நிலையை அடைந்திருக்கிறது என்பது புலனாகும்; இதை யாரும் மறுப்பதற்கில்லை.

# உதாரண புருஷர்

தமிழ்நாட்டில் 'கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை' என்ற பழமொழி அனைவரும் அறிந்த ஒன்றுதான். மீசைக்கு ஆசைப்பட்டு அதனை வளர்ப்பவரையும் அழகாக அதனை வெட்டி விட்டுக் கொள்வோரையும் நாம் ஏராளமாகப் பார்க்கவும் செய்கிறோம். ஆனால் கூழ் கிடைத்தால்கூடப் போதும் என்று உண்மையாகவே எளிமைக்கு ஆசைப்படுகின்ற ஒருவரைக் காண்பது அரிது.

தமிழகத் தலைவர்களுள் ம. பொ. சி. அவர்கள் இவ்விதத்தில் தனித்தன்மை பெற்று விளங்குபவர். பொது வாழ்வில் அன்று ஈடுபட்டபோது எப்படி இருந்தாரோ அதே போல் இன்றைக்கும் எளிமையே உருவாகக் காட்சி தருபவர் அவர். பட்டம், பணம், பதவி எதற்கும் ஆசைப்படாதவர். அவர் விரும்பியிருந்தால், மனச்சாட்சியை ஒதுக்கி வைத்து விட்டுக் காரியார்த்தமாகச் சமய சந்தர்ப்பத்துக்கு ஏற்பப் பேசி, நடந்து கொண்டிருந்தால் இன்று அவர் பெரிய பதவியில் அமர்ந்திருக்கலாம். ஆனால் இன்று உள்ளதுபோல் அவர் தமிழர்களின் இதய பீடங்களில் ஓர் உன்னத ஸ்தானத்தில் அமர்ந்திருக்க முடியாது. ம. பொ. சி. அவர்கள் பின்னதையே விரும்பி ஏற்றார்கள்.

ம. பொ. சி. அவர்கள் சிறு வயதிலேயே தீவிர அரசியல் இயக்கத்தில் சேர்ந்துவிட்டபடியால் பள்ளியில் சேர்ந்து படிக்க வசதி இருக்கவில்லை. அவர் தம் சொந்த முயற்சியிலேயே அரசியல் கருத்துக்களையும், இலக்கியங்களையும் படித்தும் சிந்தித்தும் இன்று அரசியல் மேதைகளிடையேயும் தமிழ்ப் பண்டிதர்களிடையேயும் பெரு மதிப்பையும் பாராட்டுதல்களையும் பெற்றிருக்கிறார்.

அரசியல் ஆர்வம் கொண்டவர்கள் ம. பொ. சி. அவர்களின் நறுக்குத் தெறித்தாற்போன்ற ஆணித்தரமான அபிப்பிராயங்களைக் கண்டு கருத்துச் சுதந்திரம் குறித்துப் படிப்பினை பெற முடியும்; இலக்கியக் காதல் கொண்டவர்களோ சிலம்புச் செல்வரின் புலமை மிக்க இலக்கியச் சொற்பொழிவுகளைக் கேட்டுக் கேட்டு இன்புற முடியும்; சிநேக தர்மத்தை மதிப்பவர்கள் அவர் உரையாடலை ஓர் அருங்கலையாக வளர்த்து வந்திருப்பதை உணர்ந்து ரசிக்கலாம்; பக்தி மார்க்கத்தில் மனத்தை லயிக்க விட்டவர்கள் வள்ளலாரைப் பற்றிய அவரது ஆராய்ச்சிகளில் மெய்யுருகிப் பரவசமுறலாம்; தலைவர்களிடத்தில் அசைக்க முடியாத மதிப்பு வைத்துப் பழகியவர்கள் ராஜாஜியை ராமன் என்றும் தம்மை அனுமன் என்றும் கூறிய ம. பொ. சி.யின் பவ்யத்தை எண்ணி மெய்சிலிர்க்கலாம்; ராஜாஜியிடம் அளவற்ற பக்தியே கொண்டிருந்தும் தீர்க்கமாக ஆலோசித்தபின் தமக்குச் சரி என்று தோன்றுகிற மாறுபட்ட கருத்துக்கள் சிலவற்றை அவ்வப்போது வெளியிடத் தயங்காத அவரது தீரத்தைக் கண்டு பிரமிக்கலாம்; தமிழன்னையைத் தெய்வமெனப் பூஜிப்பவர்கள் தமிழக எல்லைப் போராட்டத்தில் அவர் காட்டிய நெஞ்சுறுதியையும் தீர்க்க தரிசனத்தையும் எண்ணிப் புளகாங்கிதமுறலாம்; பலத்த எதிர்ப்பைச் சமாளிக்கவேண்டியிருப்பவர்கள் கல்லடி பட்டுக் குருதி சிந்தியும் கலங்காமல் நின்ற அவர் வாழ்க்கைச் சரிதத்தைப் பார்த்துப் புத்துணர்ச்சி பெறலாம்.

இப்படி எல்லோருக்கும் ஓர் உதாரண புருஷராக விளங்கும் ம. பொ. சி. அவர்களுக்கு இவ்வாரம் அறுபதாண்டுகள் நிறைவு பெறுகிறது. அவருக்குப் பல்லாண்டு கூறி வாழ்த்துகிறோம். தமிழகத்துக்கும் தமிழுக்கும் அவரது அரிய தொண்டு மேலும் மேலும் சிறக்கப் பிரார்த்திக்கிறோம்.



திரு ம. பொ: சி. அவர்களுக்குப் பல்லாண்டு கூறுகிறோம். அவருக்கு அறுபது வயது நிறைகிறது. அவருடைய வெண்கல நாதக் குரலைக் கேட்டவர்கள் அவருக்கு அறுபது வயதாகிறது என்பதை நம்பவே மாட்டார்கள். உடல் அறுபது வயதடைந்தாலும் உள்ளம் இன்றும் இளமை மிடுக்கோடு இருக்கிறது என்பதுதான் அதற்குப் பொருள். அந்த இளமை நீடு வாழட்டும்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

பொதுவாக எல்லாப் பொருட்களின் விலைகளையும் உயர்த்துகிற கொள்கையைப் பின்பற்றும் சர்க்கார், தானியங்களின் விலைகளை மட்டும் கட்டுப்படுத்த முயல்வது சரியல்ல. நாட்டின் பொதுவான பொருளாதார நிலைக்குக் கீழ் மட்டத்தில் உணவுதானியங்களின் விலைகள் அமைய வேண்டும் என்கிற எண்ணத்தில் பல தந்திரமான யோசனைகளை அமுல் செய்து வருகிறார்கள். ஒரே ராஜ்யத்துக்குள் உபரி உற்பத்தி செய்யும் மாவட்டத்தின் தானியங்களை மற்ற மாவட்டங்களுக்குப் போகவொட்டாமல் தடுப்பது, உபரி உற்பத்தியுள்ள ஒரு ராஜ்யத்தின் தானியம் வேறு ராஜ்யங்களுக்குச் செல்லாமல் தடுப்பது — இவை யாவும் உணவுப் பொருட்களின் விலையைக் கட்டுப்படுத்தும் திட்டங்களேயாகும்.




இத்திட்டங்களின் விளைவாக உணவு உற்பத்தியிலும் விநியோகத்திலும் ஈடுபட்டுள்ள எல்லாச் சாராரும் பாதிக்கப்படுவார்கள்.

இது போதாதென்று வெளிநாடுகளிலிருந்து அரசாங்கம் ஏராளமாகத் தானியங்களை இறக்குமதி செய்கிறது. இவற்றை விற்பனைக்கு விடா விட்டாலும்கூட, இவற்றின் கையிருப்புப் பலத்தினால் உள்நாட்டு உணவு தானியங்களின் விலை கட்டுப்படுத்தப் பெறுகிறது.

விவசாயிகள் தங்களது வாழ்க்கைக்குத் தேவைப்படும் எல்லாப் பொருட்களுக்கும் அதிக விலை கொடுக்க நேரிட்டுள்ள போது, அவர்கள் தங்கள் தானியத்தை மட்டும் குறைந்த விலைக்கு விற்க வேண்டுமென எதிர்பார்ப்பது எப்படிப் பொருந்தும்? விவசாயப் பண்டங்களும் மற்றவற்றுக்குப் போட்டியாக விலையேற்றம் கண்டால், நாட்டில் விலைஉயர்வு மிதமிஞ்சிப் போய் அதனால் நிருவாகமே ஸ்தம்பித்து நின்றுவிடும் என்று சர்க்கார் அஞ்சுகிறார்கள் போலும்! விவசாயிக்கு அதிக விலை கிடைக்க வேண்டுமாயின், மற்ற துறைகளில் உள்ள எல்லோருக்கும் ஊதியம் உயர வேண்டியிருக்கும். நாட்டின் நிதிச் செலாவணியில் பெரும் சிக்கல் உண்டாகும். இது உண்மையே! எனினும் அதற்காக, காங்கிரஸ் சர்க்காரின் மதியீனமான ஆட்சியின் விளைவுகளை விவசாயிகள் மட்டுமே சுமக்க வேண்டும் என்பது நியாயமில்லையல்லவா? காங்கிரஸ் கட்சியின் பிடிவாதமும், டம்பாச்சாரித்தனமும் அழிந்தாலே நாட்டின் பொருளாதாரம் உருப்படும். பணவீக்கக் கொள்கையைப் பின்பற்றி மற்ற எல்லாப் பொருட்களின் விலையும் உயரக் காரணமாயுள்ள சர்க்கார், விவசாயத்தில் ஈடுபட்டு நாட்டுக்கு அன்னமிடும் அனைவரையும் பின்தங்கி நிற்கச் செய்வது கலப்படமற்ற கொடுமையாகும்.

❖

பெர்மிட் — லைசென்ஸ் — கோட்டாக்கள் வழங்குவதில் அரசியல் நோக்கங்களும், கட்சிப் பட்சபாதங்களும் இடம் பெறுமல் தடுப்பதற்காக ஸ்ரீ நந்தர் அவர்கள் ஒரு 'போர்டு' அமைக்க முயலுகிறாராம். இது நீண்ட காலமாக நான் வற்புறுத்தி வருகிற விஷயம். லஞ்ச ஊழலைப் பற்றி விசாரணையும் ஆராய்ச்சியும் நடத்திய அதிகாரபூர்வமான கமிட்டிகள் இந்த யோசனையைப் பலமாக ஆதரித்தன. நீதி உணர்ச்சியுள்ள யாவரும் இதை ஆதரித்திருக்கிறார்கள்.

என்றாலும் காங்கிரஸ் கட்சியும், சர்க்கார் நிருவாகமும் இந்த யோசனையை ஏற்பது சந்தேகமே. பெர்மிட் — லைசென்ஸ் போர்டு திட்டத்தைப் பரிசீலிப்பது போல் காட்டிக் கொள்வார்கள்; முடிவில், இந்தத் திட்டத்தில் பல சிக்கல்கள் இருப்பதாகச் சொல்லி நிராகரித்து விடுவார்கள்.

பெர்மிட் — லைசென்ஸ் — கோட்டா வழங்குவதுதான் ஆள்கிற கட்சிக்கு ஒரு தங்கச் சுரங்கமாக உதவி வருகிறது. அதை விட்டு விட கட்சிக்காரர்களுக்கு மனம் வராது. இவ்வளவு நாட்களாகக் கட்டுப்பாடுகளை

விதித்தே நிருவாகம் நடத்தி வந்த அதிகாரிகள், அதை விட்டு வேறு வழியைப் பின்பற்றுவது சாத்தியமல்ல என்றே எண்ணுவார்கள், தங்களுடைய வேலையையும், அதில் கிடைக்கும் அதிகார பலத்தையும் பாதிக்கிற சீர்திருத்தங்களை யெல்லாம் 'காரிய சாத்திய மில்லை' என்று கூறி நிராகரிப்பதே அதிகார வர்க்கத்தின் வழக்கம்.

ஸ்ரீ நந்தர் அவர்கள் தமது திட்டத்தை நிறைவேற்றுவது இயலாத காரியமெனக் காலக்கிரமத்தில் காண்பார் என்றே அஞ்ச வேண்டியிருக்கிறது.

❖

கோர்ட்டுகளில் விசாரித்து விரைவில் முடிவு காண இயலாத நிருவாக ஊழல்களை விசாரிப்பதற்காக ஸ்காண்டிநேவியாவிலும், ப்ரான்ஸிலும் விசேஷமான தனி மன்றங்கள் உண்டு. நம் நாட்டில் இதுபோன்ற ஓர் அமைப்பு ஏற்படுவதை அதிகாரிகள் விரும்ப மாட்டார்கள். 'நம் நாட்டு நிலைக்கு இது ஏற்றதல்ல' என்று கூறித் தடை செய்வார்கள். உண்மையில் ப்ரான்ஸையும், ஸ்காண்டிநேவியாவையும், மற்ற எல்லா உலக நாடுகளையும்விட அதிக ஊழல் மலிந்துள்ள இந்தியாவுக்கே இத்தகைய விசேஷ மன்றம் அத்தியாவசியமாகும்.

❖

சர்வதேச அரசியல் நிபுணர்கள் யாவருக்கும் மெத்த வருத்தமளிக்கும் கீழ்க்கண்ட முடிவுகளை D-ie Welt என்ற ஜெர்மானியப் பத்திரிகை வெளியிட்டுள்ளது :

> இரண்டாவது உலக யுத்தத்துக்குப்பின் உருவான ஒரு நம்பிக்கை மங்கிக்கொண்டே வந்து, ஏமாற்றத்தில் முடிந்திருக்கிறது. உலக சமாதானத்தை உறுதிப்படுத்திக் காப்பதற்காக அமைக்கப்பட்ட ஐக்கிய நாடுகள் சபை தன் பணியை நிறைவேற்ற மேன் மேலும் அசக்தமாகி வருகிறது. பொறுப்பு எடுத்துக் கொண்டு செயலாற்றும் தைரியம் ஐ. நா. சபைக்கும் அதன் நிர்வாகிகளுக்கும் இருக்கவில்லை. ஐக்கிய நாடுகள் ஸ்தாபனம் என்பதாக ஒன்று இருக்கிறது என்ற நினைவே இல்லாதது போல் வல்லரசுகள் நடந்து கொள்கின்றன. அவை ஐ. நா. சபையை முக்கியம் வாய்ந்ததாகவே கருதவில்லை.
>
> ஐ. நா. சபை வெறும் வாக்குவாத அரங்கமாகி விட்டது என்று பிரதம காரியதரிசி ஊ தாண்ட் அவர்கள் சமீப காலத்தில் அடிக்கடி எச்சரித்து வருகிறார். ஹாமர் ஷீல்ட் அவர்கள் பொறுப்பெடுத்துக் கொண்டு நேரடியாகச் செயலாற்றியது போலன்றி, அவருக்குப் பின் வந்துள்ள ஊ தாண்ட் அவர்களோ வேண்டுகோள் விடுப்பதோடும், எச்சரிக்கை செய்வதோடும் நின்று விடுகிறார்.
>
> பற்பல கோஷ்டிகளுக்கும், பரஸ்பர உடன்படிக்கை கொண்ட நாடுகளுக்கு மிடையில் தோன்றியுள்ள முடக்குவாதத்தின் அடையாளங்கள் ஐ. நா. சபைக்குள் எதிரொலிக்கின்றன. சுதேசப் பற்று, சுதேச நலன் ஆகியவை சர்வதேச மனப்பான்மையை மங்கச் செய்துவிட்டன.

**ஆங்கிலம் ஏன் வேண்டும்?**

## கல்லூரி மாணவர்களுக்கு ஒரு வேண்டுகோள்!

நாட்டு மக்களை அறிஞர்கள் தான் நடாத்திச் செல்கிறார்கள் என்பது உண்மையானால், எதிர்காலத்தில், இன்று கல்லூரிகளில் படித்துவரும் மாணவர்களே உயர் பதவிகளிலும் உத்தியோகங்களிலும் அமர்ந்து தேச நலனுக்கு உழைக்கப் போகிறார்கள் என்று கிறது. அப்படிப்பட்டவர்கள் பாரத நாட்டினரின் எதிர்காலத்தை வெகுவாகப் பாதிக்கும் அத்தியாவசியப் பிரச்னைகள் குறித்துச் சிந்திக்காமல் வாளா விருப்பதற்கில்லை.

ஆங்கிலம் ஏன் வேண்டும் என்ற கேள்விக்கு, அயல் நாட்டுத் தொடர்புக்காக; விஞ்ஞான அறிவு வளர்ச்சிக்காக; ஆட்சி மொழி விஷயத்தில் சிக்கலையும், சர்ச்சைகளையும் தவிர்ப்பதற்காக; அம்மொழியின் சிறப்புக்காகவே என்றெல்லாம் பலதரப்பட்ட தலைப்புகளில் பதில்களைத் தரலாம்.

மேற்குறிப்பிட்டனவற்றில் ஏதேனும் ஒன்றையோ அல்லது அதைவிட அதிமுக்கியமான காரணமென உங்களுக்குத் தோன்றும் வேறு ஒரு தலைப்பையோ தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள். அதைக் குறித்துக் கல்கியில் ஒரு பக்கத்துக்குள் அடங்குகிறமாதிரி ரசமாக ஒரு கடிதம் எழுதி அனுப்புங்கள். தபால் உறையின்மீது **ஆங்கிலம் ஏன் வேண்டும்?** என்று குறிப்பிடுவது அவசியம்.

மேற்கோள் காட்டுவது, உங்கள் நண்பர்களுக்கிடையில் நடந்த சுவையான விவாதங்கள், ஆங்கில மொழி குறித்து உலக அறிஞர்களின் கருத்துக்கள், அம்மொழியின் சிறப்பை உணர்த்துவதே போல் நிகழ்ந்திருக்கக்கூடிய சம்பவங்கள் போன்றவை யெல்லாம் உங்கள் கடிதத்துக்கு மெருகேற்றும். பிரசுரிக்கப்படும் கடிதங்களுக்கு அவற்றின் தகுதிக்கேற்ப சன்மானம் உண்டு.

கடிதங்கள் அனுப்ப வேண்டிய முகவரி: ஆசிரியர், கல்கி, கீழ்ப்பாக்கம், சென்னை—10.

# இந்தப் புதிய **புஷ் ETR-106**, பெரிய செட்டின் ஒலியை போர்ட்டேபிள் டிரான்சிஸ்டரில் கொடுக்கிறது

BUSH

SW1 SW2 MW

VOLUME TUNING

இதுதான் புதிய புஷ் ஈடிஆர்-106 போர்ட்டேபிள் டிரான்ஸிஸ்டர். ஒரு பெரிய செட்டின் துல்லியமான ஒலியைக் கொடுப்பதற்கென, இதில் ஒரு பெரிய 6"x4" முட்டைவடிவான ஒலிபெருக்கி உள்ளது. மேலும் இது, 8 டிரான்ஸிஸ்டர்களும், 1 கிரிஸ்டல் டயோடும், அமுக்குப் பித்தான் வரிசையுடன் கூடிய 3 வேவ் பாண்டுகளும் கொண்டது. சீரான அமைப்புடைய இந்த நாகரிகச் செட்டிற்கு இணையான, சிரமமின்றிக் கவனமாகச் சுத்தப்படுத்தக்கூடிய எடுப்பான 'வினைல் கிரில்' (வலைத் தட்டி) பொருத்தப்பட்டிருக்கிறது. வெளிப்புற ஏரியல் மற்றும் 'இயர்ஃபோனு'க்கான பொருத்தங்களும் இருக்கின்றன. சாதாரண டார்ச் பாட்டரித் தொகுதியினால் இயக்கக்கூடியது. சிறப்பு மிக்க புஷ் பரம்பரையில் இது மிக நவீனமான டிரான்ஸிஸ்டர். இதனால் புஷ் பெருமைப்படுகிறது....நீங்களும்தான் பெருமைப்படுவீர்கள்!



## புஷ்
## டிரான்ஸிஸ்டர்ஸ்



முல்சந்தானி எலெக்ட்ரிகல் & ரேடியோ இண்டஸ்ட்ரீஸ் லிட்.,
கல் சாகர், சாண்ட்ஹர்ஸ்ட் பிரிட்ஜ், பம்பாய்-7
ராங்க் ஸ்தாபனத்துடன் இணைந்ததொரு கம்பெனி

CASBR-IA. T99




## அத்தியாயம் 13

## வெற்றி யாருக்கு?

அதுவரை அமைதியாகவே இருந்த வீடு அமைச்சர் வந்துவிட்டாரென்றதும் கலகலப்பும் பரபரப்பும் மிகுந்ததாயிற்று. அவரிடம் ஏதோ அவசரக் காரியம் ஆகவேண்டுமென்பதற்காக அவர் சென்னை திரும்பும்வரை காத்திருக்க முடியாமல் உதகைக்கே பின் துரத்திக் கொண்டுவந்திருந்தார்கள் இரு தொழில் வர்த்தகப் பிரமுகர்கள். ஏதோ காசு செலவழித்து வரத்தான் செய்தோம், இதையும்தான் பார்த்து வைப்போமே என்கிற மனோபாவத்துடன், எந்தவிதமான ரசிகத் தன்மையுமற்ற உள்ளத்துடன் அவர்கள் உதகையைச் சுற்றிப் பார்த்தார்கள். வந்த காரியம் வெற்றி பெறுமா? மந்திரி மனமிரங்குவாரா என்பதிலேயே கண்ணும் கருத்துமாயிருந்தவர்களுக்கு ஏரி நீர்ப்பரப்பின் இயற்கை எழிலும் உதகைப் பூங்காவின் செயற்கை அழகும் எல்லாம் ஒரேமாதிரியாகத்தான் இருந்தன. தொட்டபெட்டா மலைச் சிகரம் கூட அவர்களிடத்தில் எந்த விதமான சிறு உணர்ச்சியையும் உருவாக்கவில்லை. கழுகுக்கு மூக்கில் வியர்த்ததுபோல் என்பார்களே, அப்படி மந்திரி ஜாகைக்குத் திரும்பி விட்டதை மட்டும் அவர்கள் ஊகித்து விரைந்து வந்தார்கள். கேட்டுக்கு வெளியே காரை நிறுத்திவிட்டு மளமளவென்று விரைந்து தோட்டத்தைக் கடந்தார்கள்.

போர்டிகோவில் அமைச்சரின் கார் வந்து நின்றதுமே அது வரை உறங்கிக் கொண்டிருந்த தோட்டக்காரன் பெரிய கத்திரிக்கோலை எடுத்து வந்து அளவுக்கு மீறி வளர்ந்து விட்டிருந்த வேலிப் புதர்களைச் 'சடக் சடக்'கென்ற சத்தத்துடன் வெகு தீவிரமாக வெட்டிச் சீர்ப்படுத்த ஆரம்பித்தான்.

மந்திரி உள்ளே சென்றதும் டவாலிச் சேவகன் காரிலிருந்த 'பைல்'களைத் தூக்கிக் கொண்டு அவரது காரியாலய அறைக்குள் நுழைந்தான்.

சேர்ந்தாற் போல் இரண்டு டெலிபோன் மணிகள் 'கண கண' வென்று ஒலிக்கத் தொடங்கின. தீனதயாளுவுடனேயே காரில் வந்து இறங்கியிருந்த அவரது காரியதரிசி டெலிபோன்களில் பேசுவதா அல்லது தம் எதிரே வேகமாக வந்து கொண்டிருக்கும் வர்த்தகத் தொழில் அதிபர்கள் இருவரையும் வரவேற்று விசாரிப்பதா என்று புரியாமல் குழம்பினார்.

தீனதயாளுவிடம் நீண்ட காலமாகவே டிரைவர் வேலை பார்த்து வரும் ஆறுமுகம் காரைத் துடைக்குமாறு கிளீனர்ப் பையனை அதட்டிக் கொண்டிருந்தான். புதிதாகக் கிடைத்திருந்த இந்த அதிகார பலம் அவனுக்கு மிகவும் சுவையுடையதாயிருந்தது.

கேட்டுக்கு வெளியே சாதாரண உடையில் இரண்டு ஸி. ஐ. டி.கள் சிகரெட் பிடித்தபடி பொழுது போகாமல் தவித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் இப்போது வேஷ்டியை வரிந்து கட்டிக் கொண்டு ரோந்து சுற்ற ஆரம்பித்தார்கள். கேட்டை ஒட்டினாற் போல் உள் பக்கம் ஒரு போலீஸ்காரன் பிச்சுவா பொருத்தப்பட்ட கனமான துப்பாக்கியைச் சுவரில் சாய்த்து வைத்து விட்டுத் தானும் அவ்விதமே சாய்ந்து உட்கார்ந்து தொப்பியைக் கழற்றுவதும் அதனுள் எதையோ தேடுவது போல் பார்ப்பதும் கறுப்பாகப் படிந்திருந்த எண்ணெய்ப் பிசுக்கைத் தவிர வேறொன்றையும் காணாமல் மீண்டும் அதனை அணிவதுமாய் நேரத்தைக் கொன்று கொண்டிருந்தான். அவன் இப்போது துப்பாக்கியைத் தரையில் ஊன்றியபடி விறைப்பாக நின்றான்.

இந்தத் திடீர் சுறுசுறுப்பினைக் கண்டு மனத்துக்குள் சிரித்துக் கொண்ட

தீனதயாளு தாம் பின்னோடு அழைத்து வந்திருந்த டாக்டரிடம் வாசல் வராந்தாவில் ஒரு நாற்காலியைச் சுட்டிக்காட்டிச் சற்று நேரம் அமருமாறு கோரினார். பிறகு தமது மகள் படுத்திருந்த அறையை நோக்கி நடந்தார். திரைச் சீலையை விலக்கிக் கொண்டு உள்ளே அடியெடுத்து வைத்ததும் அங்கு கேட்ட அழுகுரல் வெளிப்புறத்திலும் பரவ வேண்டாம் என்று கருதியவராகப் பின்புறமாகக் கைகளை நீட்டிக் கதவுகளைச் சாத்தினார்.

''இதென்ன கோழைத்தனம் ?''— என்ற அவரது கோபக் குரலைக் கேட்டதுமே திடுக்கிட்டு எழுந்த மகேசுவரி அண்ணனை நேருக்கு நேர் பார்க்கவும் சக்தியின்றி சப்தநாடியும் ஒடுங்கிப் போய் நின்றாள்.

''ஏய்! உள்ளே போய் முகத்தைக் கழுவிக்கிட்டு வா! இன்னொரு முறை உஷா எதிரே இந்த மாதிரி அழுது அட்டகாசப்படுத்தி அவளையும் கண் கலங்க அடிச்சயோ, துரத்திப்பிடுவேன் உன்னை !'' என்று இரைந்தார்.

அவரிடம் பதில் பேசவும் திராணியின்றி அவர் அதட்டியதால் அதிகரித்த அழுகையையும் அடக்கமாட்டாமல் அங்கு நிற்கவே பயந்து பின்கட்டுக்குச் சென்று விட்டாள் மகேசுவரி.

''அத்தையைக் கோபிக்காதிங்க, அப்பா ! இத்தனை நேரம் தைரியமாகத்தான் இருந்தாள். நான் அழப் போகவேதான் அவளும் தாங்க முடியாமல் புலம்பிட்டாள்.''

''ஏன், எதற்காக அழணும்?'' என்று கேட்டார், தீனதயாளு தமது மகள்கூட அழுவதற்கு ஒரு காரணம் இருக்கக் கூடும் என்று நம்பப் பிடிக்காதவராக. ''காலிலே வலி அதிகமாயிருக்குதா? டாக்டர் வெளியே காத்துக்கிட்டிருக்கிறார். அவரிடம் எல்லாம் விவரமாகச் சொல்லு.''

''வலி அப்படியொன்றும் பிரமாதமாயில்லை, அப்பா ! எத்தனை நாளைக்கு இப்படிப் படுத்த படுக்கையாக இருக்கணுமோன்னு நெனச்சால்தான் கஷ்டமாயிருக்கு.'' தான் பயந்து அழுவதற்கான உண்மைக் காரணத்தை மறைத்து இப்படிக் கூறினாள் உஷா.

''எப்பவும் 'ஆக்டிவ்வா' துருதுருன்னு இங்கேயும் அங்கேயும் ஓடிக்கிட்டே இருந்து பழகிட்டே நீ; சிரமம் தான். டாக்டர் உன்னைப் பற்றிச் சொல்லிச் சொல்லி ஆச்சரியப்பட்டுப் போனார். இந்த எலும்பு முறிவு-'சிம்பிள் ப்ராக்சர்தான்' என்றாலும் எவ்வளவு வலி கொடுக்கும்னு டாக்டராகிய அவருக்குத் தெரியாதா? நீ ஒரு சொட்டுக் கண்ணீர்கூட விடாமல் விபத்து நிகழ்ந்த இடத்திலேயிருந்து வீடு வரை வேதனையை யெல்லாம் பொறுத்துக் கிட்டுக் குதிரைச் சவாரி செய்தே வந்து சேர்ந்தியே, அதுவே ஒரு பெரிய சாதனை இல்லையா? உடல் உறுதியினாலே சாத்தியமான காரியமா அது ? நெஞ்சுறுதிதான் காரணம்! அவ்வளவு பிடிவாதமா யிருக்கிறப்போ இந்த **ஒரு வாரக் கட்டாய ஓய்வைத்** தானா பொறுத்துக்கிட முடியாது உன்னால்?''

''ஆகட்டும் அப்பா, பல்லைக் கடிச்சுக்கிட்டு இருக்கேன். ஆனால் இந்தச் சோதனையில் நான் வெற்றி பெற நீங்களும் எனக்கு உதவணும்; ஒரு விஷயம் நீங்கள் 'பிராமிஸ்' பண்ணணும்.''

''என்னம்மா அது?''

''எனக்குக் கால் சரியானதும் என்னை நிரந்தரமா மெட்ராஸுக்கே

அழைச்சுக்கிட்டுப் போயிடறதாகச் சத்தியம் செய்து தரணும்.''

''ஏன் சத்தியபுரியில் இருப்பதில் உனக்கென்ன துன்பம்? வீடு, வாசல் வேலைக்காரர்கள், கார் எல்லாம்தான் இருக்கே? அத்தையும் உன்னைச் சரியாகக் கவனிச்சுக்கிடறாளில்லையா?''

''அதுக்கெல்லாம் ஒண்ணும் குறைச்சலில்லே; ஆனால் யாருக்குச் சகிக்கமுடியும் இந்த 'டல் லைப்?' வர வரச் சத்தியபுரியைக் கண்டாலே எனக்குக் கசக்கிறது அப்பா! அங்கே என்ன இருக்கிறது? கோழிச் சண்டையும் கோயில்திருவிழாவும்தான்! உப்புச் சப்பில்லாமல் இயந்திரம் மாதிரி ஒரு வாழ்க்கை! யாருக்கு வேணும்? டில்லி, பம்பாய், கல்கத்தா அப்படி ஏதாவது பெரிய நகரத்திலே வசிக்கணும் அல்லது குறைந்தபட்சம் சென்னையிலேயாவது குடியேறணும்..'' என்ற உஷா அதைத் தொடர்ந்து தனக்குள்ளாகவே வேறு சில விஷயங்களையும் எண்ணிக் கொண்டாள். 'சென்னையில் சங்கீத சீசன் உண்டு, அந்தத் தினங்களில் நாளுக்கொருவித அலங்காரம் செய்து கொண்டாலும் பொருத்தமாக இருக்கும்; இந்தப் பட்டிக்காட்டில் 'லேடஸ்ட் பேஷன்' சோளியும் 'அல்ட்ரா மாடர்ன்' கொண்டையும் போட்டுக் கொள்வது யாருக்குப் பிரீதி? நான்கு 'ஏர் கண்டிஷண்ட்' தியேட்டர்களிலும் சேர்ந்தாற்போல் திரைப்பட விழா நடக்கும்போது மந்திரி மகளாக உலவி வருகையில் நட்சத்திரங்களின் அறிமுகம் கிட்டும். சத்தியபுரியிலே இருப்பது ஒரே சினிமா; அதுவும் கீற்றுக் கொட்டகை! கிரிக்கெட் மாட்சுக்குப் போகலாம். அதிலும் வேண்டுமென்றே கால தாமதமாகக் கிளம்பி ஆட்டம் ஆரம்பித்துக் கொஞ்ச நேரத்துக்குப் பிறகு விசேஷ அனுமதி பெற்றுப் 'பெவிலிய'னுக்குள் நுழைந்தால் ஆட்டத்தைப் பார்ப்பதை மறந்த பார்வையாளரின் நூற்றுக்கணக்கான கண்கள் அழகாக அலங்கரித்துக் கொண்டு ஒயிலாக நடந்து வரும் யுவதியை நோக்கும். 'யார் தெரிகிறதா?' என்ற கேள்விகளும், 'தெரியாமலென்ன தீனதயாளுவின் மகள்தானே!' என்ற பதில்களும் கசமுசவென்ற பேச்சொலியாகக் கிளம்பும். அப்போது ஏற்படும் ஒரு கிளுகிளுப்பு இருக்கிறதே — அதை எருமை மாட்டுத் தோலைப் போர்த்திக் கொண்டது போல் எந்தவிதமான சலனமுமற்றுக் கிடக்கும் சத்தியபுரியிலே அனுபவிக்க முடியுமா?'

விடுமுறை சமயங்களில் அவ்வப்போது சென்னை சென்று திரும்பியிருக்கும் உஷா பாராட்டு மொழிகளைக் கேட்டு மயங்கியிருக்கிறாள், தன் அழகிலே கட்டுண்டு நிலைகுத்தி நின்ற பார்வைகளை உணர்ந்து கிறங்கியிருக்கிறாள், பொறாமையால் வெந்து புழுங்கும் மனங்களை அறிந்து பெருவகையுற்றிருக்கிறாள் — ருசி கண்ட பூனையாக இன்று விளங்கினாள் அவள்.

''உன்னுடைய 'டேஸ்ட்' எல்லாம் ரொம்ப உசத்தி அம்மா!'' என்றார் தீனதயாளு மகளைப் பற்றித் தாம் கொண்டிருந்த பெருமிதத்தைப் பெருமிதத்தோடு அவளிடமே வெளிக் காண்பித்துக் கொள்பவராக. ''ஆர்ட், கல்சர் அப்படியாக உன் மனசு ஈடுபட்டிருக்குது. உயர்தரமான கலைகளை ரசிக்கச் சத்தியபுரி ஏற்ற இடமில்லேதான். அதனால்தான் நீ பட்டணத்துக்கு வரத் துடிக்கிறே. உனக்கு ஒரு 'இன்டலக்சுவல் கம்பானியன்ஷிப்' சத்தியபுரியில் கிடைப்பதும் அருமைதான். பேச்சுத் துணைக்கு ஒருத்தர் என்றால் அந்த ஒருத்தருக்கு உன்னோடு வார்த்தையாட ஓரளவுக்கேனும் தகுதி வேணுமில்லையா? பாவம், மகேசுவரிக்கு உலகம் உருண்டை என்பது தெரியாது; அவகிட்டே என்ன பேசுவே நீ? உன் ஏக்கத்தை நான் புரிஞ்சுக்கிட முடிகிறது உஷா. ஆனால்......''

''ஆனால் என்ன அப்பா?''

''சென்னைக்கு வந்தால் உன் படிப்பு என்ன ஆகிறதம்மா? அது பாதியில் தடைப்பட்டு நிற்குமே?''

''நான் பட்டணத்துக்கு வருவது உங்களுக்குப் பிடிக்கவில்லை என்றால் 'இஷ்டமில்லை'ன்னு சொல்லிட்டுப் போங்க. எதுக்குச் சாக்குப் போக்குச் சொல்லணும்?'' என்று கோபத்துடன் வினவினாள் உஷா. ''மெட்ராஸிலே கான்வெண்ட் ஸ்கூல்தான் இல்லையா, அல்லது மந்திரி மகளுக்கு அட்மிஷன் இல்லை என்று சொல்லி விடத்தான் துணிவார்களா?''

''இதோ பார், உஷா! உன்னிடம் மனத்தில் உள்ளதைப் பட்டவர்த்தனமாக விண்டு சொல்கிறேன். சத்தியபுரித் தொகுதி மக்கள் எனக்கு வோட்டுப் போட்டு என்னை அவர்களுடைய பிரதிநிதியாகத் தேர்ந்தெடுத்தார்கள். மந்திரி பதவி ஏற்றதால் நான் சென்னையில் வருஷத்தில் பல மாதங்கள் தங்கி இருக்க நேர்ந்தாலும் என் மகளும் குடும்பத்தினரும் உள்ளூரிலேயே இருந்தால் அவர்களுக்குத் திருப்தி. 'நம்மில் ஒருவர்தான் தீனதயாளு' என்கிற மனப்பான்மை அந்தப் பகுதி மக்களிடையே வளர அது உதவும். நீ சத்தியபுரியில் இருப்ப

# சிரஞ்சீவிக் கதைகள்...

## 3. சாரதி வாகுகன்



மறுநாள் காலையில் தமயந்திக்கு இரண்டாம் சுயம்வரம். இச் செய்தி அயோத்தி அரசன் ருதுபர்ணனை எட்டியது. அவன் சாரதி வாகுகனை அழைத்தான். விரைவில் குண்டினபுரம் போக வேண்டுமென ஏவினான்.



வாகுகன் ஒரு விநாடி கலங்கினான். பின்பு புறப்பட முடிவு செய்தான்.



அரண்மனை லாயத்திலிருந்து மிகவும் சிறந்த குதிரைகளைத் தேர்ந்தெடுத்தான்.



ரதம் துரித கதியில் பறந்தது.



ரதம் செல்லும் வேகத்தில் ருதுபர்ணனின் மேலாடை நழுவிப் பறந்தது. அதை எடுக்கும்படி அவன் வாகுகனுக்குக் கட்டளை இட்டான். கட்டளையை அவன் சொல்லி முடிக்கு முன் ரதம் நூறு மைல்களைக் கடந்துவிட்டது



குண்டினபுரம் சேர்ந்ததும், ரதத்தை வாகுகன் செலுத்தி வந்த வேகம் குறித்து அரசன் ருதுபர்ணன் அதிசயித்தான். விசாரித்ததில், வாகுகன் தேரோட்டும் கலையில் வல்லவனான நளன் என்பது தெரிய வந்தது.



6P-57-3-65

# 35 பை. மிச்சம்!

'ஹேஸலின்' ஸ்னே

மற்றும் டால்க் இரண்டும்

அடங்கிய 'பாக்'கையே

வாங்குங்கள்






பர்ரோஸ் வெல்கம் & கம்பெனி (இந்தியா) ப்ரைவேட் லிட்.

தால் எனக்கும் அங்கு அடிக்கடி வந்து போக ஒரு தூண்டுதல். இல்லேன்னு 'மந்திரி பதவி கிடைச்சதும் நம்மை அடியோடு மறந்துட்டார். பட்டணத்திலேயே குடும்பத்தோடு போய்க் குடியேறிட்டார்' என்கிற பேச்சுக்கு இடம் தந்தவர்களாவோம். இதெல்லாம் 'மாஸ் ஸைக்காலஜி'. எத்தனேயோ படிச்சிருக்கிற உனக்கு இதை நான் சொல்லியா தரணும்? நமது மக்கள் படிப்பறிவு அதிகமில்லாதவர்கள். அவர்கள் மனத்தைப் புரிந்து கொண்டு அவர்களே அணைத்துக் கொண்டு போகிறது ஓர் அருங்கலே. வெறும் லட்சிய வாதங்கள், கொள்கை விளக்கங்கள் இவற்ருல் மட்டும் அவர்களே நம் பக்கமாகக் கவர்ந்திழுக்க முடியாது! நாளேக்கு மறுபடியும் தேர்தல் சமயத்திலே அவர்களிடம்தானே போய் நிற்க வேணும் நான்?''

''உங்களுக்கு எப்போ பார்த்தாலும் மக்களேப் பற்றிய நினேப்புத்தான், மகளேப் பற்றி அக்கறை இல்லே!'' என்ற உஷா, அவர் தலேயில் அணிந்திருந்த குல்லாயைக் கரத்தின் ஒரு நொடிப்பிலே விசுக்கென்று கழற்றிவிட்டாள். ''எல்லாம் இந்தக் காந்தி குல்லா பண்ணுகிற வேலே'' என்ருள். ''இது ஒண்ணு இல்லாமலேயே நீங்க பார்க்க நல்லாத்தானே இருக்கீங்க? இன்னும் கேட்டால் உங்க 'பர்ஸனுலிடி இம்புருவ்' ஆகிறது! முன்பக்கம் கொஞ்சம் வழுக்கை விழுந்திருப்பது ரொம்பப் படிச்சவர் என்கிறதைக் காட்டுகிறதோடு ஒரு கௌரவத்தையும் கொடுக்கிறது. அதை மறைச்சுக் குல்லாய் போடுவானேன்?''

''சேச்சே! என்னம்மா இது அசட்டுத்தனமான விளேயாட்டு?'' என்று மனமின்றி மகளேக் கோபித்துக் கொண்டார் தீனதயாளு. உஷாவுக்கே அதே சமயத்தில் 'நாம் அளவுக்கு மீறி நடந்து கொண்டு விட்டோமோ?' என்ற பயம் தோன்றியிருக்க வேண்டும். சட்டென்று குல்லாயை அவர் மடியில் போட்டு விட்டு, ''ஐ வாஸ் ஜஸ்ட் கிட்டிங் யூ டாடி!'' என்று குழைந்தாள், சிரித்து மழுப்பியபடியே.

''எதை வைத்துக் கிண்டல் செய்வதென்பதில்லேயா உஷா!'' என்ருர் தீனதயாளு. அவளது நடத்தையையோ அல்லது சிரிப்பையோ தாம் ரசிக்கவில்லே என்பதை ஒளிக்காமல் காண்பித்துக் கொண்ட போதிலும் அவளேக் கண்டிக்கிற அளவுக்கு அவருக்குக் கோபம் வரவேயில்லே. குல்லாய் அவர் மடி மீதே கிடந்தது. அதைத் திரும்ப அவர் அணிய முற்படவில்லே.




''மணி பன்னிரண்டாகப் போகிறதே. இன்னும் நீங்கள் ஆபீஸுக்குக் கிளம்பவில்லேயா?''
''இன்று மானேஜர் லீவு!''

சற்று நேரம் அங்கு வழக்கமில்லாத விதமாகத் தந்தைக்கும் மகளுக்குமிடையில் அசாதாரணமான ஒரு மௌனம் நிலவியது. ஒருவரையொருவர் பார்த்துக் கொள்வதையும் தவிர்க்க விரும்பியவர்கள் போலிருந்தார்கள்.

ஒரு பெருமூச்சுடன் குல்லாயைக் கரத்திலெடுத்துக் கொண்டு எழுந்தார் தீனதயாளு. அந்த அறையிலேயே இல்லாத யாரிடமோ பேசுவது போல், ''டாக்டரை வரச் சொல்கிறேன்'' என்று கூறிக் கதவருகே சென்று குரல் கொடுத்தார்.

நீண்ட நேரம் காத்திருந்து அலுத்துப் போனவராக வெகு சீக்கிரம் பரிசோதனையை முடித்துக் கொண்டார் டாக்டர். ''இரவு அமைதியாகத் தூங்க ஒரு இன்ஜெக்ஷன் போடுகிறேன்'' என்றவாறே தமது பெட்டியைத் திறந்து ஊசி, ஸிரிஞ்ச், மருந்து முதலானவற்றை எடுத்தார். ''எத்தனே நாள் ஊட்டியில் காம்ப்?'' என்று கேட்டார் ஏதாவது பேச வேண்டுமே என்பதற்காக.

''இருக்கலாம்; இன்னும் இரண்டு வாரங்கூடத் தங்கலாம்'' என்ருர் தீனதயாளு. ''இங்கே நாலேந்து 'கான்பிரன்ஸ்'களேப் போட்டுக்கிட்டால் இந்த வெயில் காலத்துக்குச் சௌகரியமாயிருக்கும்னு பிளான் போட்டேன். ஸீஸனே இங்கே ஓட்டிப்பிடலாம், இல்லேயா? ஆனு அதுவே பெரிய தொல்லேயாய்ப் போச்சு. உதகைக்கு வந்தும் ஓய்ச்சல் ஒழிவில்லே. எல்லாம் தவிர்க்க முடியாத முக்கிய ஆலோசனேக் கூட்டங்கள். பிரச்னேகளே ஆராயறதும்

யைல்களைப் புரட்டறதுமே காரியமாயிடுச்க'' என்றார் சலிப்புடன்.

டாக்டர் விடைபெற்றுச் சென்று விட்டார், தம்கடமை பூர்த்தியானதும்.

அவர் போன பிறகு அங்கே மீண்டும் நிசப்தம் நிலவியது. தந்தைக்கும் மகளுக்கும் இடையில் சற்று முன் ஆரம்பமான மௌனப் போராட்டம் நீடித்தது. இந்தப் பிடிவாதத்தில் மற்றொருவர்தான் விட்டுக் கொடுத்து முதலில் பேச்சை ஆரம்பிக்க வேண்டும் என்று இருவருமே எதிர்பார்த்தார்கள். உஷா மன்னிப்புக் கோர வேண்டும் என்று தீனதயாளு கணப்போதுகூட நினைக்கவில்லை. அப்படி அவள் கேட்டிருந்தால் அதை அவர் விரும்பியிருக்க மாட்டார், வெறுத்தேயிருப்பார். தமது மகளைக் குறித்து அவர் கொண்டிருந்த பெருமிதத்துக்குப் பழுதேற்பட்டிருக்கும். ஆனால் இப்போது அவர் வேண்டியது, ஏங்கியது 'அப்பா' என்ற ஓர் அழைப்புக்காக; ஒரு சொல்லுக்காக.

காலைத் தூக்கிக் கட்டி வைத்திருந்த நிலையில் அதிகமாகப் புரண்டு படுக்க இயலாத உஷா தலையை மட்டும் திருப்பினாள், தகப்பனார் இருந்த திசைக்கு எதிர்ப்புறமாக. ஜன்னலை நோக்கியபடி முகத்தை வைத்துக் கொண்டு கண்களையும் மூடினாள்.

கட்டிலுக்குப் பக்கத்திலிருந்த ஜன்னலுக்கு அப்பால் பல ரோஜாச் செடிகள் பூத்துக் குலுங்கின. உதகையின் சீதோஷ்ண நிலையில் உள்ளங்கை அகலத்துக்குச் செழித்து வளர்ந்திருந்த அவற்றினை அணுகி ஜன்னல் கம்பிகளுக்கிடையில் கரத்தை விட்டு ஒரு மலரை மட்டும் பறித்தார் தீனதயாளு. மகளை நோக்கித் திரும்பினார்.

''கெட் வெல் ஸூன் !'' என்ற வார்த்தைகளைக் கேட்டுப் புன்முறுவலுடன் இமைகளைப் படபடத்துத் திறந்தாள் உஷா. சீக்கிரமாக உடம்பு தேற வேண்டும் என்று கூறி மலரை அன்புப் பரிசாக அளிப்பது போல் பாவனை செய்த போதிலும் உண்மையில் அம்மலர் சமாதானச் சின்னமாக நீட்டப்பட்டதுதான் என்பதை அவள் உணர்ந்தாள்; அப்படி அவள் உணர்ந்தாள் என்பதை அவரும் நன்கு அறிந்து கொண்டார்.

தளர்த்தி வாரி இரட்டைப் பின்னல் போடப்பட்டிருந்த கேசத்தில் முன் பக்கம் முகத்தின் அருகில் தெரிகிற மாதிரி மலரைச் செருகிக் கொண்டாள் உஷா. கூடவே எதையோ நினைத்துக் கொண்டவள் போல் கலகலவென்று நகைத்தாள். அவரது தோல்வியைக் கண்டு நகைப்பதாக அவர் எண்ணி விடக் கூடாதென்கிற கருத்தில் உடனேயே, அவர் ஏதும் கேட்காத போதே உஷா, ''அத்தை இப்போ இங்கே இருந்தால் என்ன சொல்வாள் தெரியுமா ?'' என்று கேட்டாள். '''நீ எப்படி இருக்கேன்னு கேட்டுப் போக யாராவது இந்த அறைக்குள் நுழைந்தால் உஷாவின் முகம் எது, ரோஜாமலர் எது என்று புரியாமல் தவிப்பாங்க! திருஷ்டி சுற்றிப் போடணும்' என்பாள்!'' இப்படிச் சொல்லும் போது உஷாவின் முகத்தில் அலாதியான ஓர் ஒளி கூடியது. குரலில் ஒருவித மோக போதை காரணமாக இலேசான நடுக்கம் இழையோடியது. கண்களில் கர்வம் நர்த்தனமாடியது.

''தேவலேயே அவளுக்கு ஒண்ணுந் தெரியாதுன்னு நெனேச்சுக்கிட்டிருந்தேன்; கவிதை உள்ளமே இருக்கும் போலிருக்கிறதே!'' என்றார் தீனதயாளு.

''அத்தை யுடைய 'பொயடிக் ஸென்ஸ்' கிடக்கட்டும் அப்பா! நீங்க மெல்லப் பேச்சை மாற்றித் தப்பிச்சுக்கிடப் பார்க்காதீங்க. நான் சென்னைக்கு வருகிற விஷயம் இன்னும் தீர்மானமாகலேயே !''

''இன்னும் ஒரு வருஷம் பொறுத்துக்கிடு உஷா! பள்ளிப் படிப்பு பூர்த்தியாகட்டும். அப்புறம் காலேஜுக்குக் கோயமுத்தூர் வேணாம். சென்னேயிலேயே ஒரு கல்லூரியில் சேர்ந்துடலாம். சரிதானே?''

''நிஜம்தானே அப்பா ? இது உங்களுடைய 'ப்ரி எலக்ஷன் பிராமிஸ்'கள் போன்றதில்லேயே?''

''என்னம்மா இது? எதிர்க்கட்சிக்காரங்க பேசறது, போதாதுன்னு நீ வேறே.... தேர்தலுக்கு முன்னால் தரப்பட்ட எந்த வாக்குறுதியை நிறைவேற்றாமல் இருந்திருக்கேன்?''

''அதுவா? நீங்கள் இந்த நாட்டின் முதல் தென்னிந்தியப் பிரதம மந்திரியாகறச்சே நான் லோக் சபாவிலே அப்போஸிஷன் ஃபிரண்ட் பெஞ்சில் உட்கார்ந்திருப்பேன். அப்போ கேளுங்க சொல்கிறேன் !''

''நீ எதிர்க்கட்சியின் முன்னணி வரிசையிலே இருந்தால் நான் உடனே ராஷ்டிரபதி கிட்டே மந்திரி சபையின் ராஜிநாமாவைச் சமர்ப்பிச்சுட்டு உனக்குப் பின்னாலேயே வந்து உட்கார வேண்டியதுதான்'' என்றார் தீனதயாளு.

வெள்ளிமணியின் நாதமென ஒலி எழுப்பிச் சிரித்தாள் உஷா. அன்று இரவு முழுதும் அவள் நிம்மதியாகத் தூங்கிய போதெல்லாம் வெற்றிப் புன்னகை அவளுடைய அளவான இதழ்களில் அழியாமல் நின்றது. **(தொடரும்)**

நங்கையர் மேனி நலம்பெற்று மிளிர...

கோகுல் ஸான்டால் டாய்லெட் பவுடர்

•

கோகுல் ஸான்டல்வுட் டாய்லெட் பவுடர்

•

கோகுல் ப்யூடி பவுடர்

•

கோகுல் டர்மரால் சோப்



டி. எஸ். ஆர் & கோ

மதராஸ்
&
கும்பகோணம்










CRITERION-TSR.246.

# கந்தன் கருணை

## 34. "நாளைக்குப் புறப்படுவோம்!"

**வீ**ரவாகு செய்த வீர சாகசங்களைக் கேட்கக் கேட்க சூரபன்மனுக்கு ஆத்திரம் எல்லைமீறிப் பொங்கிற்று. சதமுகனை அழைத்து ''நீ போய் அவனைப் பிடித்து அடக்கிக் கொண்டு வா'' என்று ஆணையிட்டான். சதமுகன் வீரர் பலரின் துணையுடன் வீரவாகு தேவரைத் தொடர்ந்தான். வீரவாகு தேவர் கந்தவேளைத் தியானித்துச் சதமுகனின் படையுடன் போரில் இறங்கினர். கந்தன் கருணையினல் அசுரர் எய்த படைக்கலங்களைத் துகள்துகளாக்கி அழித்தார். இருபதினுயிரம் சிகரங்களைக் கொண்ட ஒரு சூளிகையைப் பறித்து அசுரர்கள் மீது எறிந்தார் வீரவாகு தேவர். அது அசுரர்களை மாய்த்தது. வீரவாகு தேவர் சதமுகனைப் பூமியில் உருட்டி அவனுடைய நூறு தலைகளையும் இடறிக் கொன்ருர். 'கருணை நிறைந்த கந்தவேளின் அறவுரையை இகழ்ந்து பேசிய சூரபன்மனின் அத்தாணி மண்டபத்தை முதலில் அழித்துவிட்டுப் பின்னர் அவனது நகரத்தையும் அழிக்க வேண்டும்' என்று எண்ணம் கொண்ட வீரவாகு தேவர் பேருருவம் கொண்டார். அந்தப் பேருருவத்தின் சுமை தாங்காது வீரமகேந்திரபுரி நடுங்கியது.

அரண்மனையைக் காவல் புரிந்த ஐம்பது வெள்ளம் அசுரர்களையும் அழித்த வீரவாகு தேவர் ஐந்நூறு யோசனை அகலமும் ஆயிரம் யோசனை உயரமும் இலட்சம் சிகரங்களும் கொண்ட ஒரு செய்குன்றைக் கையால் பெயர்த்தெடுத்து அத்தாணி மண்டபத்தில் அதனை வீசினர். அதனல் மண்டபத்தின் பெரும் பகுதி அழிந்தது. இதனைக் கண்ட சூரபன்மன் ஐந்நூறு முகங்களும், ஆயிரம் தோள்களும் உடைய ஆயிரம் வீரர்களை ஏவினன். அவர்கள் வீரவாகு தேவரை யடைந்து போர் செய்வதற்கு முன்பே அவர் வீரமகேந்திரபுரியின் சோலை, மண்டபம், கோபுரம் இவற்றையும் மற்றுமிருந்த வனப்புக்களையும் அழித்து, மதில்களை உதைத்துச் சிதைத்துச் சூரபன்மனின் அரண்மனையையும் அழித்தார். சூரபன்மனின் அரண்மனையைச் சூழ்ந்த அகழியைத் தூர்த்தார். அசுரர்கள் இறந்ததால் ஏற்பட்ட உதிரப் பெருக்கம் வீரமகேந்திரத்தைச் சேருக்கியது. வரவிருக்கும் பேரழிவுக்குக் கட்டியம் கூறியதுபோல் வீரமகேந்திரபுரி தன் வளங்களையெல்லாம் இழந்து அழிந்தது.

ஐந்நூறு தலைகளும் ஆயிரம் கைகளும் கொண்ட சகத்திரவாகுகள் வந்து வீரவாகுதேவரை எதிர்த்தனர். அவர்களை மராமரத்தினுல் அடித்துக் கொன்ருர் வீரவாகுதேவர். ஆகாயத்தில் நின்று போரைப் பார்த்துக் கொண்டிருந்த சூரபன்மனின் ஒற்றர்கள் சகத்திரவாகுகளை வீரவாகுதேவர் கொன்று விட்ட செய்தியைச் சூரனுக்குத் தெரிவித்தார்கள். இச்செய்தியைக் கேட்ட சூரபன்மனின் கோபம் வடவாமுகாக்கினி போலக் கொழுந்து விட்டெரிந்தது.

அசுராதிபதியின் இளைய மகன் வச்சிரவாகு. அவன் வச்சிர சரீரமும், பத்துத் தலைகளும், இருபது தோள்களும் உடையவன். தந்தையின் கோபத்

தைக் கண்ட அவன் தானே வீர வாகுவைச் சிறைப்பிடிக்கச் சென்றான்.

பதினாயிரம் குதிரைகள் பூட்டப் பட்ட ஒரு தேரின் மீது, போர்க் கோலம் பூண்ட வச்சிரவாகு ஏறிக் கொண்டான். அவனது தோழர் களும் தேர்களில் ஏறிக் கொண்டு, வச்சிரவாகுவைச் சூழ்ந்தனர். பேரிகை, சங்கு, உடுக்கை, துந்துபி முதலிய வாத்தியங்கள் முழங்க, வச்சிரவாகு தனது சேனைகளுடன் வீரவாகு தேவரை நோக்கி விரைந்து சென்றான். அவன் போருக்குப் புறப்பட்டுச் சென்றபோது துர்ச் சகுனங்கள் பல தோன்றின. காகம், கழுகு, பருந்து முதலியவை இரக் கத்துடன் கூவின. வச்சிரவாகுவின் கையிலிருந்த வில் தன்னாலே நழுவி விழுந்தது. அவனது அம்பராத் தூணி அறுந்தது. தேர்க்கொடிகள் கிழிந்து விழுந்தன. வச்சிரவாகு வின் இடத் தோளும், இடக் கண் களும் துடித்தன.

வச்சிரவாகு போர்க்களத்தை அடைந்தான். அவனிடம் சூரபன்ம னின் முகச் சாயலைக் கண்டார் வீர வாகுதேவர். ''சூரபன்மனின் புதல் வர்களில் ஒருவன் வந்திருக்கிறான். இவனையும் அழித்து இன்று மாலை கந்தக் கடவுளின் திருவடிகளைத் தரிசிக்கும்படி விரைந்து செல் வேன்'' என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டு, கந்தவேளின் கருணையை வேண்டி வணங்கித் துதித்தார். பின் தமது தோள்களைத் தட்டி ஆரவாரம் செய்தார். அப் போது வானமும் வையமும் குலுங்கின.

''இப்பொழுது எழுந்த ஒலியைப் போன்று பதினான்கு உலகங்களிலும் நான் கேட்டதில்லை. இது என்ன ஒலி?'' என்று தனது தேர்ப்பாகன் விசயனிடம் கேட்டான் வச்சிரவாகு.

''இளைய மகாராஜா! அந்தத் தூதன் தோள்களைத் தட்டினான். அதனால் ஏற்பட்ட ஒலி இது'' என்று தேர்ப்பாகன் கூறினான்.

வீரவாகுதேவருக்கும் வச்சிரவாகு வின் படைகளுக்குமிடையே பயங் கரப் போர் மூண்டது.

அசுர வீரர்களும் வச்சிரவாகுவின் அருமைத் தோழர்களும் வீரவாகு தேவரால் மாண்டனர். வச்சிர வாகுவை நெருங்கிய வீரவாகுதேவர் பேருருவம் எடுத்து ஆரவாரம் செய்தார்.

இருவரும் சளைக்காமல் களைக்கா மல் கோர யுத்தம் புரிந்தனர். போரின் தீவிரம் முற்றி, வீரவாகு வின் அங்கங்கள் மீதெல்லாம் அம்பு தொடுத்துப் புண்ணாக்கினான் வச்சிரவாகு.

வெகுண்டெழுந்த வீரவாகு தேவர் வச்சிரவாகுவின் தேரைக் கையால் எடுத்து வானத்தில் எறிந் தார்; அவனுக்குத் துணையாக வந் திருந்த மற்ற தேர்களை அழித்தார். விண்ணில் தேருடன் தூக்கி எறியப் பட்ட வச்சிரவாகு இலட்சம் யோசனை தூரம் ஆகாயத்தில் சென்று வீரவாகுதேவரின் முன்பு திரும்பி வந்து விழுந்தான். சிறிதும் களைப்பின்றி வீரவாகு தேவருடன் மீண்டும் போர் செய்ய ஆயத்த மானான். உடனே, வீரவாகுதேவர் அவனது வில்லைப் பறித்து முறித் தார். அதன்பின் வாட்படையால் வீரவாகுதேவரை எதிர்த்துப் போர் செய்தான் வச்சிரவாகு. தமது வாளி னால் அவனது கையை வெட்டி வீழ்த்தினார் வீரவாகுதேவர். ஒரு கை துண்டிக்கப்பட்டதும் மற்றொரு கையால் ஒரு கண்டாயுதத்தை எடுத்து வீரவாகுதேவர் மீது எறிந் தான் வச்சிரவாகு. அந்த ஆயுதத் தைப் பொடியாக்கி வச்சிரவாகுவின் பத்துத் தலைகளையும் வாளாயுதத் தினால் அறுத்தார் வீரவாகு. அசுர அரசிளங்குமரன் மாண்டான்.

வச்சிரவாகு இறந்தபின் வீரவாகு தேவருடன் போர் செய்ய அசுரர்கள் எவரும் முன் வர வில்லை. மாலைப் பொழுது வருவதைக் கண்ட வீர வாகுதேவர் கந்தக் கடவுளின் திரு வடிகளை நினைந்து, திரும்பிச் செல்ல விரும்பினார். போரை விட்டு வீதி வழியே காற்றும் கனலும் காலனும் சேர்ந்து போவது போலப் போனார்.

ஆகாய வழியாக் வீரமகேந் திரத்தை விட்டுப் புறப்பட்டார் வீரவாகு. வடதிசையில் உள்ள இலங்கை மலையை அடைந்தார். ஆயிரம் முகங்களும் ஈராயிரம் கைக ளும் உடையவனும், இயமபுர வாசல் போன்ற வாய்களைப் பெற்ற வனுமான யாளிமுகன் இலங்கை யைக் காவல் செய்து கொண்டிருந் தான். அன்று காலை அவன் சூரபன்ம னிடம் சென்றிருந்தான். அப்போது

தனது மகன் அதிவீரன், வீரவாகுவால் கொல்லப்பட்ட செய்தியறிந்தான். வீரவாகுதேவர் விரைந்து செல்லுவதைக் கண்ட அவன், 'என் மகன் அதி வீரனைக் கொன்றவன் அதோ வருகிறான்' என்று ஊகித்து ஆத்திரமுற்றான்.

யாளிமுகனும் அவனது வீரர்களும் வீரவாகு தேவரைச் சூழ்ந்து கொண்டார்கள். வீரவாகுதேவர் அக்கூட்டத்துள் நுழைந்து அவர்களை வெட்டிவீழ்த்தினார். யாளிமுகனின் ஈராயிரம்கைகளையும் அவர் அறுத்துத் தள்ளினார். அவன் தனது ஆயிரம் துதிக்கைகளாலும் வீரவாகுதேவரைப் பிடிக்க முயன்றான். அவனது ஆயிரம் தலைகளையும் ஒருங்கே அறுத்து யாளி முகனைக் கொன்றார் வீரரில் வீரரான வீரவாகு.

இடையூறுகள் யாவும் நீங்கின. அதன்பின் ஒரே மூச்சில் வீரவாகு தேவர் கடலைத் தாண்டிக் கந்தமாதன மலையைச் சார்ந்துள்ள திருச்செந்தூரை அடைந்தார். கந்தக் கடவுளின் பூத சேனைகள் வீரவாகு தேவரைக் கண்டு முழுமதியைக் கண்ட கடல் போல் கோஷித்தன. பூதகணங்களின் தலைவர்கள் கரம் குவித்து அவரை வணங்கிப் பின்னர் ஆரத் தழுவிக் கொண்டார்கள்.

பகைவனிடத்தும் அன்பு செய்யும் வீரவாகு தம் உற்றோரின் அன்பில் கரைந்தார். ''அந்தப் பாவிகள் வாழும் ஊரைப் பார்த்ததால் அடைந்த பாவம் உங்களைக் கண்டதால் நீங்கிப் போயிற்று'' என்று அவர்களிடம் மிகுந்த அன்புடன் கூறினார் வீரவாகு தேவர்.

என்றுமே ஆணவத்துக்கு அன்பின் குரலும் அறத்தின் குரலும் கேட்பதில்லை. அநுமன் சீதாதேவியை விடுவிக்குமாறு எவ்வளவோ தருமங்களை எடுத்துச் சொல்லியும் இராவணன் திருந்தவில்லை. உலகளந்தபெருமான் தம் பாதம் நோக நடந்து சென்று, ''பஞ்சவர்க்கு ஐந்து வீடுகள் கொடுத்தாலும் போதும்'' என்று துரியோதனனிடம் கையேந்திக் கேட்டும் அவன் இணங்கினானில்லை.

ஆணவமே வடிவான சூரபன்மன் கந்தநாயகனின் பெருமையை உணரவில்லை; வீரவாகுதேவர் எவ்வளவோ எடுத்துரைத்தும் திருந்தவில்லை.

ஒருவன் தன் குற்றங்களை உணருவது போன்ற பெருமை வேறெதிலும் இல்லை. இதற்கும் ஆண்டவனே மனிதனாக வந்து வழிகாட்டியிருக்கிறார். ராமபிரான் சீதையைக் காணாமல் வருந்திய போது, தம்பி இலக்குவன் சொல்லைக் கேளாத தம் குற்றத்தை வாய் விட்டுக் கூறி ஏங்கினார். இல்லாத குற்றத்தையெல்லாம் தம் மீது ஏற்றி உருகி அழுவர் மெய்யடியார். ''குலம் பொல்லேன்; குணம் பொல்லேன்'' என்று கூறி இறைவனிடம் முறையிடுகின்றார் அப்பர் பெருமான். அருணகிரிநாதரோ, உலகிலொருவன் எவ்வளவு தவறாக இருக்க முடியுமோ, அத்தனைத் தவறுகளும் தம்மிடமே யிருப்பதாக பாவித்துப் பாடுகிறார்:

**அவகுண விரகனை வேதாள ரூபனை**
**அசடனை மசடனை ஆசார ஈனனை**
**அகதியை மறவனை ஆதாளி வாயனை**
**அஞ்சுபூதம்**

**அடைசிய சவடனை மோடாதி மோடனை**
**அழிகரு வழிவரு வீணாதி வீணனை**
**அழுகலை யவிகலை ஆறான ஊணனை**
**அன்பிலாத**

**கவடனை விகடனை நானா விகாரனை**
**வெகுளியை வெகுவித மூதேவிமூடிய**
**கலியனை அலியனை ஆதேச வாழ்வனை**
**வெம்பிவிழுங்**

**களியனை யறிவுரை பேணாத மாநுட**
**கசனியை யசனியை மாபாதனாகிய**
**கதியிலி தனையடி நாயேனை யாளுவ**
**தெந்நாளோ ?**

குற்றங்களைச் செய்யாத பெரியோர்கள், பற்பல குற்றம் செய்த மக்களும் பாடி உருகுவதற்கென்றே இப்படியெல்லாம் மொழிந்திருக்கின்றனர்.

எண்ணிறந்த குற்றங்களைச் செய்த சூரன் பச்சாத்தாபமோ, திருந்தவேண்டும் என்ற உணர்வோ பெறவில்லை.

திருச்செந்தூர் திரும்பிய வீரவாகு தேவர், முருகப் பெருமான் திருவடிகளை வணங்கி இவ்விஷயத்தையெல்லாம் கூறலானார்.

''அண்ணலே! கல்லைப் பஞ்சாக்க முடியாது. மூடர்களை யாராலும் திருத்த முடியாது. தேவரீரின் திருவாக்கைச் சூரபன்மனிடம் கூறினேன். எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் சூரபன்மன் திருந்தவில்லை. வேல் ஒன்று தான் அவனைத் திருத்தும்'' என்றார் வீரவாகுதேவர்.

''வீரவாகு! நீ எப்படி மீண்டு வந்தாய்? நீ செய்த செயல்கள் யாவை? அவற்றைப் பற்றியெல்லாம் சொல்லவில்லையே. அவற்றையும், சொல்'' என்று அன்பு உருவமாகிய ஆறுமுக வள்ளல் ஆர்வமிகுதியுடன் அவரைக் கேட்டார்.

''தங்களுக்குக் கூறவும் வேண்டுமா? சூரபன்மனின் நகரத்திற்குச் சென்று மீண்ட போது அடியேனின் காரியத்தைத் தடுத்து இடையூறு செய்தவர்களைத் தேவரீரின் திருவருளைத் துணையாகக் கொண்டு தானே வென்று வந்தேன்?'' என்று வீரவாகுதேவர் கூறினார்.

முருகக் கடவுளின் திருவுள்ளத்தின் திட சங்கற்பம் உருவாயிற்று. பிரமன், இந்திரன் முதலிய தேவர்களைப் பார்த்து, ''நாம் சொல்லியனுப்பிய அறிவுரையைச் சூரபன்மன் ஏற்றுக் கொள்ளவில்லை. ஆதலால், நாமே நாளைக்கு அவனோடு போர் செய்யப் புறப்படுவோம்'' என்று கூறியருளினார்.

தேவர்கள் அதனைக் கேட்டுப் பேரானந்தம் எய்தினர். ''எங்கள் துன்பம் இப்போதே நீங்கியது'' என்று கூத்தாடினர்.

வீரவாகுதேவர் தாம் சயந்தனைச் சிறையில் சந்தித்து வந்ததையும், அவனுக்கு ஆறுதல் கூறியதையும் இந்திரனுக்கு எடுத்துரைத்தார். இன்பம் என்பதையே மறந்திருந்த இந்திரனும் அதைக் கேட்டுப் பெருமகிழ்ச்சியுற்றான்.

இங்கே திருச்செந்தூரில் தேவர்கள் இவ்வாறு மகிழ்ந்திருந்த வேளையில், வீரமகேந்திரபுரியிலே வச்சிரவாகு இறந்ததையும் வீரவாகுதேவர் மீண்டு சென்றதையும் கேள்வியுற்ற சூரபன்மன் துயரக் கடலில் ஆழ்ந்திருந்தான்; அவனது சுற்றத்தாரும், பதுமகோமளையும் கதறி அழுதார்கள். மகேந்திரபுரியில் மங்கல ஒலி அடங்கியது; அழுகைக் குரல் ஓங்கியது.

ஆற்றொணாத் துயரில் சூரபன்மன் ஆழ்ந்திருந்த போது, மந்திரி தருமகோபன் வந்து வணங்கினான். ''ஆயிரத்தெட்டு அண்டங்களையும் அளவற்ற செல்வங்களையும் பெற்று ஒப்பாரும் மிக்காருமின்றி ஆட்சி புரியும் அரசர்க்கரசே! தாங்கள் கண்ணீர் விட்டால் மும்மூர்த்திகளும் தேவர்களும் நகைக்க மாட்டார்களா? உங்கள் புகழ் குன்றிப் போகாதா? எவ்வளவு இன்னல்கள் நேர்ந்தாலும் மன வலி குன்றாது தாம் எண்ணிய காரியங்களைச் செய்து முடிப்பார்களே வீரர்கள். விதியை வெல்ல யாராலும் முடியாது. உங்கள் புதல்வனின் விதி முடிந்து விட்டது. ஆதலால்தான் கந்தனின் தூதன் அவனைக் கொன்றானேயன்றி, அந்தத் தூதனின் வீரத்தினால் நம் இளவல் இறந்துபடவில்லை. வரம்பில்லா வரங்களைப் பெற்ற தாங்கள் இதற்காக வருந்தக் கூடாது'' என்று கூறி, மேலே நடக்க வேண்டியதை ஆராய்ந்து பார்க்கும்படி வேண்டினான்.

சூரபன்மன் ஒருவாறு மனம் தெளிந்தான். இனி என் செய்வது என்று யோசித்த அவன் அழிந்த நகரத்தைப் புதுப்பித்துத் தன் தோல்வியை விரைவில் மறைத்துவிட வேண்டும் என்று முடிவு செய்து கொண்டான். அருகிலிருந்த சேவகர்களை நோக்கி, ''நீங்கள் விரைந்து சென்று பிரம்மனை அழைத்து வாருங்கள்'' என்று உத்தரவிட்டான்.

அந்தச் சேவகர்கள் அச்சத்துடன் கூறினர்: ''பிரமன் இந்திராதி தேவர்களோடு முருகனுடன் போய்த் தங்கி இருக்கிறான் என்று நேரில் பார்த்தவர்கள் சொன்னார்கள்; நாம் அழைத்து அவர் வருபவராகத் தெரியவில்லை.''

சூரபன்மன் நெருப்புச் சிரிப்பு சிரித்தான். ''இந்த அண்டத்துப் பிரமன்தானே நமக்குத் துரோகம் செய்து விட்டு எதிரியுடன் போய்ச் சேர்ந்து கொண்டான்? மற்ற அண்டங்களில் ஒன்றின் பிரமனை அழைத்து வாருங்கள்'' என்று உத்தரவிட்டான்.

அதன்படி ஒரு பிரமன் வந்ததும், ''எதிரியின் தூதன் அழித்த இந்நகரத்தை முன் போல் அழகாக நிர்மாணம் செய்'' என்று சூரன் உத்தரவிட்டான். ''இமைப் பொழுதில் உமது ஆணையை நிறைவேற்றுவேன்'' என்று கூறிய இந்தப் பிரமன் வீரமகேந்திரபுரியின் அழிந்த வீதிகளை முன்னிலும் அழகுற அமைத்தான்; சோலைகள் முன்னிலும் பசுமையாகத் திகழ்ந்தன; நீர் நிலைகளிலே நீர் வளம் முன்னிலும் மிகுந்தது; முன்னிலும் உறுதியாக மதில்களும் கோபுரங்களும் அமைந்தன. அவற்றைக் கண்டு மகிழ்ந்த சூரபன்மன், அதன் அழகை வியந்தான். ''நீ உன்னுடைய அண்டத்துக்குச் சென்று முன் போல் படைப்புத் தொழிலைச் செய்து கொண்டிரு'' என்று பிரமனுக்கு ஆணையிட்டான். (தொடரும்)

## மறக்காதே!

ஓடிக்கொண்டிருந்த சைக்கிளின் முன் சக்கரம் பின் சக்கரத்தைப் பார்த்து ''நான் செல்லும் வழியில்தானே நீ வருகிறாய்?'' என்று சிறிது ஆணவத்துடன் கேட்டது.

பின் சக்கரம் முன் சக்கரத்திடம் ''நான் ஓடுவதால்தான் நீ சுழன்று செல்கிறாய்'' என்றது.

ஓட்டிக்கொண்டிருந்த மனிதன் தன்னைத் தனக்கு மேல் இருந்துகொண்டு ஒருவன் ஆட்டி வைக்கிறான் என்பதை மறந்து தன்னால்தான் வண்டி ஓடுகிறது என்று நினைத்தான். -அபிஜித்




"இரண்டு அல்லது மூன்று ரூம்தான் சார் நம்ப வீடு. அதற்காக 'ஆர்கிடெக்ட்'க்கு வேறு பணம் அழுவானேன்?" என்று கூறித் தாங்களாகவே பிளான் போட ஆரம்பிக்கும் சிலரைப் பார்க்கிறோம். அவரவர் சக்திக்கேற்ப ஓர் 'ஆர்கிடெக்'டைத் தேர்ந்தெடுத்து அவரைக் கலந்தாலோசிப்பதைப் பண விரயம் என்று கருதலாகாது. எளிமையில் எழில் காண அவர் உங்களுக்கு உதவ முடியும். பெரிய விடானாலும் வெளித் தோற்றத்தில் படாடோபத்தைக் காட்டிலும் வனப்பே மனத்தில் பதிகிற மாதிரி அமைய வேண்டும். முக்கியமாக வர்ணம் தீட்டுகையில் பல்வேறு நிறங்களை அள்ளித் தெளித்தாற்போல் டெக்னிக் கலர் பண்ணாமல் அமைதியான, கண்ணுக்குக் குளிர்ச்சியான இரண்டு அல்லது மூன்று நிறங்களைத் தேர்ந்தெடுத்து அவற்றைப் பொருத்தமான இடத்தில் பூச வேண்டும். நீங்கள் அழகிய வீட்டைக் கட்டும்போது உங்கள் நகரையே அழகுபடுத்துகிறீர்கள் என்பதைக் கணப்போதும் மறக்கலாகாது.

இங்கே உள்ள படங்களில் சுமாரான வசதியுடைய ஒருவர் மாடியில்லாமல் கட்டிக் கொள்ளக்கூடிய வீட்டினைக் காண்கிறோம். முதல் இரு படங்கள் ஒரே வீட்டினை இரு வேறு கோணங்களிலிருந்து பார்க்கும்போது அளிக்கும் தோற்றத்தையும் மூன்றாவது படம் அதே வீட்டின் பிளானைச் சற்றே மாற்றி அமைத்தால் எப்படியிருக்கும் என்பதனையும் உணர்த்துகின்றன. வீட்டினுள்ள அறைகளின் கிரவுண்ட் பிளானும் கொடுக்கப்பட்டுள்ளது. 1. முன் வராந்தா. 2. ஹால். 3, 3A. குளியலறையுடன் கூடிய ஓர் அறை. 4, 4A. குளியலறையுடன் கூடிய இன்னுமோர் அறை. 5. பின் வராந்தா. 6. சமையலறை. 7. சாப்பிடும் அறை. 8. ஸ்டோர். 9. மற்றொரு குளியலறை. 10. கார் ஷெட்.



## சித்திரலேகா



"பாவம் என்றால் என்ன?"

இந்தக் கேள்வியுடன் தொடங்கிய பகவதிசரண் வர்மாவின் நாவல் 'கவி' வாசகர்களுக்குப் பழக்கமானது.

இந்த நவீனத்தை எடுத்துவிட்டால், படித்து முடிக்கும் வரை கீழே வைக்கத் தோன்றாது. அவ்வளவு சுவாரசியமாக இருக்கும். அதுமட்டுமல்ல; வரலாற்றுப் பின்னணியிலே புனையப்பட்ட கதையாயினும் படிப்பவர்களின் மனத் திரையிலே மிக நேர்த்தியான சலனப் படமெனப் பாத்திரங்கள் வளைய வருவார்கள். காம்பீர்யமும் பெருமையும் துலங்க மனத்தை நிறைவுபடுத்துவார்கள்.

இத்தகைய சிறந்த குணசித்திரக் கதையை ஒருமுறை படமாக்கிய கேதார் சர்மாவே, இம்முறை வண்ணப் படமாக வழங்கியுள்ளார். காட்சி ஜோடனையும் வண்ணக் கோலமும் பிரமிக்க வைக்கின்றன திகட்டும் அளவுக்கு! சில இடங்களில் சரித்திரப் பின்னணியை மறந்து தற்கால நாகரிகம்கூடத் தலைகாட்டுகிறது.

சிறந்த நடிகர்—நடிகையர் எனக் கூறப்படும் அசோக் குமார், பிரதீப் குமார், மஹ்மூத், மீனா குமாரி முதலியவர்கள் ஏதோ வேடம் புனைந்து வளைய வருகிறார்களே ஒழியக் கதாபாத்திரங்களை உணர்ந்து நடிக்கவில்லை. உணர்ச்சி கொப்புளிக்க வேண்டிய கட்டங்களில் உயிரற்று நிற்கிறார்கள்.

யோகி குமாரகிரியிடம் கதையில் காணப்படும் மிடுக்கைக் காண முடியவில்லை. மதுக் கோப்பையிலேயே மூழ்கியிருக்கும் சித்திரலேகாவிடம் அந்தப் பாத்திரத்துக்குரிய வசீகர சக்தியைக் காண முடியவில்லை. ராஜநர்த்தகியாக நடிக்கும் மீனா குமாரி ஒரு நடனம்கூட ஆடாதது ஏனோ? சுவேதாங்கனை ஒரு விதூஷகனாகவே உருவாக்கப்பட்டிருக்கிறான்.

படிக்கும்பொழுது கற்பனை கலந்து ஓடிய கதை படமாகப் பார்க்கும் பொழுது ஆமை வேகத்தில் ஊர்கிறது. உப்புச் சப்பற்ற ஒரு கதையைப் படிப்பதுபோல் தலைவலியை உண்டுபண்ணுகிறது. சிறந்த கதையான சித்திரலேகா இப்படி ஒரு மட்டமான படமாக உருவாக்கப்பட்டிருப்பதைக் காணும்பொழுது நல்ல கதைகள் நம் டைரக்டர்களின் கையில் மாட்டிக் கொண்டால், இந்தக் கதியைத்தான் அடையுமோ என்று வருத்தத்தோடு நினைக்கத் தோன்றுகிறது. திரைப்படத்தின் தரத்தை என்னவென்று வரையறுப்பது? ●

---

## டாக்டர் வித்யா



எத்தனைதான் இடித்துரைத்தாலும் இந்தப் பட முதலாளிகள், கதை விஷயத்தில் கவனம் செலுத்துவதில்லை. கதை எப்படியிருந்தாலும் ஓட்டிக் காட்டுகிறோம் என்று மார் தட்டுகிறார்கள். அதற்கான வழி தங்களுக்குத் தெரியும் என்று பெருமை பாராட்டிக் கொள்கிறார்கள். அதற்கு ஒரு கணக்கும் போட்டு வைத்திருக்கிறார்கள்; நாலு நடனம், மூன்று பாட்டு, ஒருசில காதல் காட்சிகள், நகைச்சுவை என்ற பெயரில் பல கேலிக் கூத்துகள்!

இவற்றைப் பார்த்து மக்கள் கைதட்டிச் சீழ்க்கை யடித்துப் பாராட்டித் தீர்க்கவே டாக்டர் வித்யா போன்ற படங்கள் தைரியமாக வெளி வருகின்றன.

என்ன கதை என்கிறீர்கள்? படித்த பெண் படிக்காத இளைஞனை மணந்து கொள்ளுகிறாள். படித்த பெண்கள் இளைஞனைக் கேலி செய்யவே கட்டிய பெண்டாட்டியை உதறிவிடுகிறான். அப்புறம் அந்தப் படித்த பெண் டாக்டராகப் பட்டம் பெற்று அவன் ஊருக்கே வருகிறாள். படிக்காத பெண்ணாக வேஷம் போட்டு அவன் மனத்தை ஈர்க்கிறாள். அவன் மாமியாருக்குப் பார்த்த மாத்திரத்திலேயே தம் மருமகள் என்பது தெரிந்து விடுகிறது. ஆனால் கைப்பிடித்த கணவனுக்கு...? கதை முடியும் வரை தன் மனைவி என்று தெரியவில்லை.

பார்க்கப்போனால் கதாநாயகியாக வரும் வைஜயந்திமாலாவைக் காட்டிலும், சமையற்காரனாகவும் டாக்டராகவும் வரும் உப நடிகர் நன்றாக நடித்து 'அப்ளாஸ்' பெறுகிறார். இந்த ஹிந்திப் படத்தைப் பார்ப்பதனால், தமிழர்களாகிய நாம் நிச்சயமாக ஓர் ஆறுதல் பெறலாம். ஹிந்திப் படங்களும் நம் தமிழ்ப் படங்களைப் போலத்தான் முன்னேறி வருகின்றன என்று முன்னேற்றத்தைப் பின்னேற்றக் கணக்குப் போட்டு மகிழலாம். ●

# விண்வெளிப் போட்டி

விசேஷக் கட்டுரை







விண்வெளி வீரராவதற்கு வேண்டிய பயிற்சிகளைப் பெற்று வந்த ஜேம்ஸ் மக்டவிட் ஏதோ காரியமாகத் தமது நண்பர்களுடன் ஒரு புதிய ஊருக்குச் சென்றார். அங்கே தங்கள் ஜாகையிலிருந்து குறிப்பிட்ட ஓர் இடத்துக்குக் காரில் கிளம்பினார்கள் அவர்கள். போகும்போது வழி தப்பி ஒரு தவறான பாதையில் காரைத் திருப்பினார் ஜேம்ஸ். பின்னால் அமர்ந்திருந்த நண்பர் ஒருவர் ''ஏனப்பா இந்த ஊரிலேயே ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்துக்குச் செல்வதற்கு உனக்கு வழி தெரியவில்லையானால் சந்திர மண்டலம் வரையில் எப்படிப் போய்த் திரும்பப் போகிறாய்?'' என்று கிண்டலாகக் கேட்டார். ஜேம்ஸ் உட்பட அனைவருமே கொல்லென்று சிரித்தார்கள்.

எனினும் இது நடந்து சில தினங்களில் — இம் மாதம் முதல் வாரத்தில் — ஜேம்ஸ் தமது விண்வெளிப் பயணத்தைத் தொடங்கித் தொண்ணூற்று எட்டு மணி நேரத்துக்குப் பிறகு திட்டமிட்டபடி வெற்றிகரமாகத் திரும்பவும் செய்தார். அவருடன் சென்ற ஒயிட் விண்வெளிக் கப்பலை விட்டு வெளியேறி இருபது நிமிஷங்கள் விண்வெளியில் நடந்து சென்று புதிய 'ரிகார்ட்'டை ஏற்படுத்தினார்.

சந்திரனை யார் முதன் முதலில் சென்று அடைவது என்பதில் ருஷியாவுக்கும் அமெரிக்காவுக்கும் இடையில் ஏற்பட்டுள்ள போட்டியைக் கண்டு அறிஞர்கள் பலர் வருந்துகிறார்கள். இப்படி மனித யத்தனத்தையும் பணத்தையும், போட்டி மனப்பான்மையில் வீணாக்காமல், இரு நாட்டு விஞ்ஞானிகளும் தங்கள் அறிவாற்றலால் கண்டறிந்துள்ள விஞ்ஞான அதிசயங்களை ரகசியமாகப் பாதுகாக்காமல் ஒருவருக் கொருவர்

- இடதுபுறம் உள்ளவர்தான் விண்வெளியில் நடந்த ருஷ்ய வீரர் அலெக்ஸை லியோநோவ்; பக்கத்தில் அவர் சக பிரயாணி பாவெல் பெல்யாயெவ்.
- விண்வெளித் தம்பதியர் வாலென்டைனா-நிகோலயெவ்.
- தமது குடும்பத்துடன் அமெரிக்க விண்வெளி வீரர் மக்டவிட்.
- ருஷ்ய வீரர்களான யெகோரோவும் கோமரோவும்.
- அமெரிக்க விண்வெளி வீரர் ஒயிட் மனைவி மக்களுடன்.

விண்வெளிப் பயணங்கள் குறித்துப் பரபரப்படைந்த மனத்துடன் விளங்கும் நமக்குச் சொப்பனத்திலும் அந்த எண்ணங்கள் இடம் பெறுவது சகஜம்தானே? விண்வெளியின் எடையற்ற நிலையில் மனிதனளிக்கக் கூடிய தோற்றமும் அப்போது அவன் காணக்கூடிய சூழ்நிலையும் விண்வெளிப் பயணத்தைத் தொடங்கும் ராக்கெட்டின் செந்நிறப் புகை மண்டலத்தினூடே தெரிவது போல் ஒரு கனவுக் காட்சியை அளிக்கிறார் ஓவியர் விஜு இவ்விதழ் அட்டையில்.

பகிர்ந்து கொண்டால் இறுதி லட்சியத்தை அடையும் தினம் மிக அருகில் வந்து விடுமேயென்று இவர்கள் ஆவலுடன் கருதுகிறார்கள். இப்போது ருஷ்யர்கள் ஏற்கனவே கண்டுபிடித்து வைத்திருக்கும் பல விஷயங்களை அமெரிக்கர்கள் தாங்களும் கண்டுபிடிக்கக் காலத்தையும் பணத்தையும் விரயமாக்குவதையும் அதேபோல் இவ்விரு நாட்டு விஞ்ஞானிகளும் தனித் தனியே செயலாற்றுவதால் ருஷ்யர்களுக்கும் நேரமும் செல்வமும் வீணாவதையும் இவ்வறிஞர்கள் சுட்டிக் காட்டுகிறார்கள்.

இதற்கு நேர்மாறாக இந்தப் போட்டி மனப்பான்மையின் விளைவாகத்தான் இந்தத் துறையில் இவ்வளவு துரிதமான முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது என்று நம்புவோரும் உண்டு.

ஆனால் சாமான்யமான உலக மக்களுக்கு இந்த விண்வெளிப் போட்டி மிக சுவாரசியமான ஒன்றாக அமைந்து வருகிறது. குதிரைப் பந்தயத்தில் எந்தக் குதிரை முதலில் வரும் என்று பார்க்கிற ஆர்வத்துடன், பரபரப்புடன் விண்வெளிப் பயண முன்னேற்றங்களைக் கவனித்து வருகிறார்கள். குதிரைப் பந்தயத்தில் இறுதியாக வந்து கொண்டிருக்கும் குதிரை கடைசி சில நிமிஷ நேரங்களில் திடீரென்று வேகம் பெற்று எல்லைக் கோட்டை நோக்கிப் பாயும். இரண்டில் எந்தக் குதிரையின் மூக்கு முதலில் எல்லைக்







அமெரிக்க விண்வெளி வீரர்களின் படங்களை உதவியவர்கள்:
World Book Encyclopedia Science Service (1965)

கோட்டை நோக்கி நீண்டது என்பதைப் புகைப்படத்தில் பார்த்துத்தான் தெரிந்து கொள்ள வேண்டும் என்கிற நிலைகூட ஏற்படும். இத்தகைய பரபரப்பூட்டும் ஒரு ''ஃபோட்டோ ஃபினிஷ்'' ஐ நோக்கித்தான் ருஷ்ய – அமெரிக்க விண்வெளிப் போட்டியும் இப்போது சென்று கொண்டிருக்கிறது. விண்வெளிப் பயணத்தில் பல 'முதல் சாதனைகளை'ப் புரிந்திருக்கிறது ருஷ்யா. முதல் செயற்கைச் சந்திரனைப் பறக்க விட்டது, லைகா நாயுடன் செயற்கைச் சந்திரனை அனுப்பியது, காகரினின் விண்வெளிப் பயணம், விண்வெளியில் முதல் பெண்மணி, மூன்றுபேர்கள் பயணம் செய்த முதல் செயற்கைச் சந்திரன் என்று பல முதல் வெற்றிகளுக்குச் சிகரமாக விண்வெளியில் நடந்த முதல் மனிதன் என்ற முறையில் லியோநோவ் சிறப்புப் பெற்றார். லியோநோவின் இந்த அற்புத சாதனைக்குப் பிறகு இரண்டே மாதங்களில் அமெரிக்கர் ஒயிட் விண்வெளியில் நடந்து திரும்பியது இந்தத் துறையில் இரு நாடுகளுக்கு மிடையே இருந்த இடைவெளி குறுகிக்கொண்டு வருவதற்கு அத்தாட்சியாக விளங்குகிறது. ஆகவேதான் இப்போட்டியில் முன்னைக் காட்டிலும் சூடு பிடித்துமிருக்கிறது. எனினும் இரும்புத் திரை சூழ்ந்த ருஷ்யாவில் லைக்காவை வானவெளியிலே அனுப்பி அந்தப் பரிசோதனை வெற்றி என்று தெரிந்த பிறகு, 'நாயை உலகைச் சுற்ற விட்டிருக்கிறோம்' என்று மார்தட்டிக் கொள்ளலாம். ஆனால் ஜனநாயகப் பண்பாட்டில் ஊறிய அமெரிக்கா அவ்விதம் செய்வதற்கில்லை. இன்ன தேதியில் குரங்கை அல்லது மனிதனை விண்வெளிக்கு அனுப்பப் போகிறோம் என்று முன்கூட்டியே அறிவிக்க வேண்டும். பத்திரிகையாளரும் பார்வையாளரும் மக்களும் ஆயிரக்கணக்கில் கூடியிருக்கிறபோது அவர்கள் ராக்கெட்டைக் கிளப்ப வேண்டும். ஆகவே அமெரிக்கரின் வேலை சிரமமாகிறது. அவர்கள் அவசரப்படுவதற்கில்லை. இந்த முக்கிய வேறுபாட்டை உலக மக்கள் மறப்பதற்குமில்லை.

இப்போது கூட, லியோநோவ் விண்வெளியில் நடந்து பத்திரமாக விண்வெளிக் கப்பலுக்குத் திரும்பி விட்டார், இனி ஏமாற்றத்துக்கு இடமில்லை என்று உறுதியாகத் தெரிந்தபிறகே ருஷ்யர்கள் இச் செய்தியை உலகுக்குத் தெரிவித்தனர். ஆனால் அமெரிக்காவில் பயணம் தொடங்குவதற்கு ஒன்பது நாட்கள் முன்னதாகவே ஒயிட் விண்வெளியில் நடக்க முயலுவார் என்று அறிவிக்கப்பட்டது. அமெரிக்கப் பத்திரிகைகள் சில 'இது வெறும் பிரசார தந்திரம்!' என்று பரிகாசம்கூடச் செய்தன!

இந்தக் கருத்துச் சுதந்திரத்தைக் கேலிக்கூத்தென்று கம்யூனிஸ்ட் தலைவர்கள் கருதலாம். ஆனால் அவர்களால் ஆளப்படும் மக்கள் அவ்விதம் நினைப்பார்களா?

**மா**மனாரின் பரிசாக முப்பத்தைந்து ரூபாய் பெறுமானமுள்ள டெரீலின் சட்டை போட்டுக்கொண்டு வருபவனைப் பார்த்துப் பொறாமைப்படும் மனிதர்கள், ஒயிட் அணிந்து சென்ற விண்வெளி உடையின் மதிப்பை அறிந்தால் மயங்கி விழுந்து விடுவார்கள். முப்பத்தோரு பவுண்டு எடை உள்ளதும், முப்பதாயிரம் டாலர் பெறுமானமுள்ளதுமான விசேஷ உடை தரித்துத்தான் விண்வெளிக் கப்பலில் இம்மாதம் மூன்றாம் தேதி ஏறிச் சாய்மானமான நாற்காலியில் படுத்து உடலை அந்த ஆசனத்துடன் பிணைத்துக் கொண்டார் ஒயிட். அவருக்குப் பக்கத்தில் மக்டவிட்டும் அதேபோன்று உடை தரித்து மற்றொரு ஆசனத்தில் அமர்ந்தார். சரியாகக் காலை பதினொரு மணி பதினாறு நிமிஷங்களுக்குக் குபு குபுவென்று ஆரஞ்சு நிறத்தில் உஷ்ணமான பெரும் புகை மூட்டம் ராக்கெட்டின் அடிவாரத்திலிருந்து கிளம்பியது. 4,30,000 பவுண்டு அழுத்தம் உருவாகி ராக்கெட்டை மேலே உயர்த்தியது. படிப்படியாக அதன் வேகம் அதிகரித்தது. மூன்று பகுதிகளைக் கொண்டதான அந்த ராக்கெட்டின் முதல் பகுதி சக்தி தீர்ந்ததும் கழன்று விழுந்தது. அடுத்த பகுதி இயங்க ஆரம்பித்து மக்டவிட்டும் ஒயிட்டும் அமர்ந்திருந்த விண்வெளிக்கப்பலை இன்னும் உயரே மணிக்கு 17,500 மைல் வேகத்தில் கொண்டு சென்றது. ஆறு நிமிஷங்களும் ஆறு விநாடிகளும் தான் இப்படிப் பயணம் செய்தார்கள் அவர்கள். அதற்குள் பூமி மட்டத்திலிருந்து 103 மைல் உயரத்தை அடைந்துவிட்டார்கள். அப்போது மக்டவிட் ஒரு பட்டனை அழுத்த விண்வெளிக் கப்பலில் இணைந்திருந்த ராக்கெட்டின் இரண்டாவது பகுதியும் கழன்று கொண்டது. மூன்றாவது பகுதியான விண்வெளிக் கப்பல் இப்போது தனித்து ஒரு செயற்கைச் சந்திரனாக உலகைச் சுற்றி வர ஆரம்பித்தது.

மூன்றாவது தடவையாக அது உலகைச் சுற்றி வர ஆரம்பித்த சமயம் ஒயிட் கப்பலை விட்டு வெளியே செல்லத் தீர்மானித்தார். அதற்கான பிரத்தியேக பாதுகாப்புக் கவசங்களை அணிந்தார். விண்வெளியில் எடையற்ற ஒரு நிலையில் காற்றில் நடப்பது எப்படிச் சாத்தியமாகும்? அவர் கையில் ஏந்திக்கொண்டிருந்த ஒரு 'துப்பாக்கி'யின் விசையை அழுத்தியதும் அதன் முனையிலிருந்து வாயு வேகமாக வெளிப்பட்டு எதிர்த் திசையில் ஒயிட்டைத் தள்ளிச் சென்றது. ஒரு சில நிமிஷங்களுக்குள் அந்தத் துப்பாக்கியிலிருந்த எரிபொருள் தீர்ந்து போய்விடவே ஒயிட் அதன் பிறகு தம்மை விண்வெளிக் கப்பலுடன் பிணைத்த கயிற்றினைப் பிடித்துக் கொண்டு முன்னும் பின்னும் நகர்ந்தார். நெஞ்சை முறுக்கித் திரும்பினார். விண்வெளிக் கப்பலை உதைத்துக் குட்டிக்கரணம் அடித்தார். விண்வெளிக் கப்பலுடன் அவரைப் பிணைத்த 24 அடி நீளமுள்ள கயிறு அவரைப் பத்திரமாகக் கப்பலுக்குள் திரும்பக் கொணர்ந்து சேர்க்க உதவியதோடு மட்டுமல்ல; அந்தக் கயிற்றினூடே பாய்ந்த டெலிபோன் கம்பிகள் அவர் தமது சகா மக்டவிட்டுடன் பேச வாய்ப்பளித்தன; அக்கயிற்றோடு இழையோடிய மெல்லிய குழல் வழியே பிராணவாயு அவருக்குக் கிடைத்துக் கொண்டிருந்தது. தாயுடன் கருவிலுள்ள சேயைப் பிணைக்கும் தொப்புள் கொடிபோல் இந்தக் கயிறு இயங்கியது எனலாம்.

ஒயிட்டைக் கப்பலுடன் பிணைத்திருந்த இந்தக் கயிறு தப்பித் தவறி அறுந்து




# இளமையிற் கல்

சமையல் பயிலும் சிறுமி, அவளே வருங்காலக் குடும்பத் தலைவி. கற்றுக்கொடுங்களேன் ஒரு நாள். எவ்வளவு விரைவில் கற்றுக்கொடுக்கிறீர்களோ அவ்வளவுக்கு அவ்வளவு மேல்.

உங்கள் குழந்தைகளுக்கு நீங்கள் இப்போதே கற்றுக்கொடுக்க வேண்டிய மற்றொரு பாடம், பற்களையும் ஈறுகளையும் ஒழுங்கு தவறாமல் பராமரிப்பதே. பற்சிதைவும் ஈறு நோய்களும் வராமல் பாதுகாத்த உங்கள் உதவிக்காகப் பிற்காலத்திலே நன்றி செலுத்துவார்கள் அவர்கள்.

போர்ஹான்ஸ் பற்பசை கொண்டு பற்களையும் ஈறுகளையும் பாதுகாத்துக்கொள்ள இன்றே பழக்குங்கள் உங்கள் செல்வங்களை. அது ஒரு பல் வைத்தியரின் தயாரிப்பாகும்; ஈறுகளின் நலனுக்காக டாக்டர் போர்ஹான்ஸ் தயாரித்த விசேஷத் துவர் மருந்துகள் அடங்கிய பற்பசை உலகில் இதுவொன்றே. தவறாமல் உபயோகித்துவந்தால் பனிச்சென்ற வெண் பற்களையும் பாங்கான உறுதிவாய்ந்த ஈறுகளையும் பெற்று விளங்குவது திண்ணம்.

"CARE OF THE TEETH AND GUMS" என்ற சிறிய வண்ணப் புத்தகத்தை இலவசமாகப் பெற, தபால் செலவுக்காக 10 பைசா தபால் வில்லைகளை இணைத்து எழுதவும்: மானேர்ஸ் டென்ட்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை நம்பர் 10031, பம்பாய்.




K. 6

## COUPON

Please send me a copy of the booklet
"CARE OF THE TEETH AND GUMS"

*Name* ..............................................................

*Address* ..............................................................

..............................................................












போயிருந்தால் அவரே ஒரு செயற்கைச் சந்திரனாக மாறி எல்லையற்ற விண்வெளியில் காலமெல்லாம் பூமியைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்க வேண்டியதுதான்!

நல்லவேளையாக இம்மாதிரி யெல்லாம் அசம்பாவிதமாக எதுவும் நேராமல், ஒயிட் பத்திரமாகக் கப்பலுக்குத் திரும்பி வந்தார்.

நாலு நாட்களில் மொத்தம் 1,609,684 மைல் பயணம் செய்து 62 முறை உலகைச் சுற்றி வந்தனர் இவ்விரர்கள். இத்தினங்களில் விஞ்ஞானிகள் அவர்களுக்கெனப் பிரத்தியேகமாகத் தயாரித்தளித்திருந்த உணவு ருசிகரமாக இருந்திருக்காது. எல்லாவற்றையும் மசித்துக் கூழ்போல் தந்திருந்தார்கள். எனினும் மற்றப்படி அவர்கள் பயணம் சௌகரியமாகவே இருந்ததென அறிகிறோம். கப்பலுக்குள் அவர்கள் தூங்கி எழுந்தார்கள்; தேகப் பயிற்சிகூடச் செய்தார்கள். பூமி மட்டத்திலுள்ள விஞ்ஞானிகளுடன் அடிக்கடி தொடர்பு கொண்டார்கள். தங்கள் மனைவியருடன் அளவளாவினார்கள். அளவிட முடியாத நீள அகலங்களைக் கொண்ட விண்வெளியில் இருந்தபோதிலும் நகரக்கூட இடமில்லாததான இந்தக் கப்பலுக்குள் அடைந்து கிடக்க வேண்டியிருக்கிறதே என்று மக்டவிட் தமது மனைவியிடம் குறைப்பட்டுக் கொண்டார். விண்வெளியில் நீந்திய ஒயிட்டுக்கோ கப்பலுக்குத் திரும்பவே மனம் வரவில்லை. பலமுறை அவரது சகாகடிந்துரைத்து அழைத்த பின்னர்தான் அவர் மனமின்றித் திரும்பினார். அப்படித் திரும்ப நேர்ந்த காரணத்தால் 'இது என் வாழ்நாளில் ஒரு துக்க தினம்' என்று வருத்தப்பட்டுக் கூறியபடி கப்பலுக்குள் மீண்டும் அமர்ந்தார்!

நாலுநாட்கள் விண்வெளியில் இருந்த பிறகு அந்தக் கப்பலைத் தானாகவே மனித யத்தனமின்றியே அட்லாண்டிக் மகா சமுத்திரத்தில் கொண்டு வந்து சேர்க்கும் 'எலக்ட்ரானிக் கம்பியூட்டர்'களில் ஏதோ பழுது ஏற்பட்டு விடவே மக்டவிட் தாமே விண்வெளிக் கப்பலை இயக்க வேண்டியதாயிற்று. கப்பலின் வேகத்தைக் குறைத்துக் கீழே இறங்கச் செய்ய 'விண்வெளிப் பிரேக்கு'களைப் போட்டார் மக்டவிட். ஆனால் இதற்கான விசையை **ஒரே ஒரு விநாடி முன்னதாக** அவர் அழுத்தியதன் விளைவாக அட்லாண்டிக்கில் கப்பல் இறங்க வேண்டிய இடத்துக்கு **நாற்பது மைல்களுக்கு அப்பால்தான்** விழுந்தது! இதிலிருந்தே விண்வெளிக் கப்பல்களில் உள்ள விசைகள் எத்தனை நுணுக்கமானவை, அவற்றைக் கையாள எவ்வித அறிவாற்றலும், திறமையும் தேவை என்று ஒருவாறு ஊகிக்கலாம். விண்வெளி வீரருக்குப் பயிற்சி அளிப்பதிலும் எவ்வளவு கண்டிப்பும் உழைப்பும் காண்பிக்கப்பட வேண்டும் என்பதும் புரியும். உதாரணமாக ஒயிட் இப் பயணத்தை மேற்கொள்ளு முன்னர் 1200 முறை எடையற்ற நிலையைப் பூமி மட்டத்திலேயே செயற்கை விஞ்ஞான முறையில் அனுபவித்திருக்கிறார் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

ஆனால் இந்தப் பயணமெல்லாம் போதுமா, 238,857 மைல் தொலைவிலுள்ள சந்திரனை அடைய? நூறு மைல் தூரம்தானே

## உங்களுக்குத் தெரியுமா?

★ ஒரு கோழியின் மேல் 8000க்கு மேற் பட்ட சிறகுகள் முளைக்கின்றன, தெரியுமா?

★ தலைவலி, தலைவலி என்று நம்மில் பலர் அடிக்கடி அவஸ்தைப்படுகிறார்களே? டாக்டர்கள் இப்போது தலைவலியே நாற்பத் தேழு வகைப்பட்டது என்று கண்டு பிடித்திருக்கிறார்கள்!

★ ஆண்களைவிடப் பெண்கள் 1/3 மடங்கு வேகமாக மூச்சு விடுகிறார்களாம்!

★ உங்கள் பெயர் எவ்வளவு எடை தெரி யுமா? என்ன ஆச்சரியப்படுகிறீர்கள்? உங்கள் பெயரில் வரும் ஒவ்வொரு எழுத்தும், பென்சிலால் எழுதினால், .0000125 அவுன்ஸ் எடையாம்! — சரஸ்வதி ராகவன்

இன்றைய விண்வெளி வீரர்கள் சென்றிருக் கின்றனர்? இது போதாதுதான். சந்திரனை அடைவது எளிதான காரியமில்லைதான். ஆனால் ஏணியில் முதல் படியில் கால் எடுத்து வைத்த பிறகுதானே கடைசிப் படியைச் சென்றடைய முடியும்? விண்வெளியின் சூன் யத்தை, எடையற்ற நிலையை மனிதன் சமா ளிக்க முடியும், அங்கு அவன் கப்பலை விட்டு வெளியே வந்து பல காரியங்களைச் செய்ய முடியும் என்பது இன்று தீர்மானமாகி யிருக் கிறது. இனி விஞ்ஞானிகள் விண்வெளியில் ராக்கெட் தளம் அமைக்க வேண்டும். அதற் கான பல பகுதிகளையும் பூமி மட்டத்தில் தயாரித்து விண்வெளிக்குக் கொண்டு போய் அவற்றை ஒன்றொடொன்று இணைக்க முயன்று வெற்றி காண வேண்டும். பிறகு இந்தத் தளங்களிலிருந்து புறப்பட்டுச் சந்திர மண் டலம் நோக்கிச் செல்லும் ராக்கெட்டுகளில் விண்வெளி வீரர்கள் பயணப்பட வேண்டும்! அந்த நாள் வரும்போது பூமியிலுள்ளோ ருக்குச் சூரிய சந்திரர்கள் நீங்கலாக இந்த ராக்கெட் தளங்களே பெரிதாகக் கண்ணில் தட்டுப்பட்டு வியப்பூட்டும்!

இதையெல்லாம் சாதிக்க முடியும் என்ற நம்பிக்கை நாளுக்கு நாள் வளர்ந்து வருகிறது விஞ்ஞானிகளுக்கு. எனினும் அவர்கள் வெற்றி காண வேண்டிய பிரச்னைகளும் ஏராளமாயுள்ளன. உதாரணமாக விண்வெளி யில் மனிதனுக்குப் பூமி மட்டத்தில் தேவைப் படுவதைக் காட்டிலும் இரு மடங்கு அதிக மாகக் குடிநீர் வேண்டும். இல்லையென்றால் அவன் சரீரம் காய்ந்த திராட்சை போல் சுருக்கங்கள் மிகுந்ததாகிவிடும். அதிகமான எடையுள்ள அந்தளவு நீரையும் இங்கிருந்து கொண்டு போவது மிகவும் சிரமம் என்ப தால் சிறுநீரைக் குடிநீராக்கும் சாதனத்தை உருவாக்கி வருகிறார்கள். சந்திர மண்டலத் தில் மோட்டார் காரிலா பவனி வர முடியும்? அங்கு உலவி வருவதற்கான வாகனங்களை இன்றே தயாரிக்கத் தொடங்கி விட்டார்கள்!

அப்படியாவது, இவ்வளவு பணம் செலவு செய்து சிரமப்பட்டு, சந்திரமண்டலத்தைச் சென்றடையாவிட்டால் என்ன? பைத்தியக் காரத்தனமாகப் படுகிறது பலருக்கு! அமெ ரிக்கருக்கும் ருஷ்யருக்கும் இடையில் உள்ள போட்டி மனப்பான்மை, வெற்றி காண வேண்டும் என்ற துடிப்பு ஆகியவை ஒருபுற மிருக்க, அமெரிக்கப் பொருளாதாரத்துக்கே ஆணி வேர் போல் அமைந்து விட்டிருக்கிறது இந்த விண்வெளிப் பயணப் போட்டி? தனியார் துறையைச் சேர்ந்த ஆயிரக் கணக்கான கம்பெனிகள் இன்று விண்வெளிப் பயணத்துக்குத் தேவையான பல்வேறு உபகரணங்களைத் தயாரிப்பதில் ஈடுபட்டு லட்சோப லட்சம் அமெரிக்கருக்கு வேலை வாய்ப்புக்கள் அளிக்கின்றன. ''பணத்தை யெல்லாம் நாங்கள் சந்திர மண்டலத்தில் கொண்டு போய்க் கொட்டிவிடவில்லை. அமெ ரிக்காவின் தொழில் வளம் பெருகத்தான் பயன்படுத்தியிருக்கிறோம்'' என்று சுட்டிக் காட்டுகிறார் ஒரு பொருளாதார நிபுணர்.

அதே சமயத்தில் புதிய ஆராய்ச்சிகளுக் காகச் சர்வகலாசாலைகள் மான்யங்கள் பெறு கின்றன. தேவைப்படும் அதிகமான விஞ் ஞானிகள், பொறி இயல் நிபுணர்களுக்காக உபகாரச் சம்பளங்கள் தரப்படுகின்றன. ஆகவே நாட்டில் அறிஞர்கள் மிகுதியாகின் றனர். வேலை வாய்ப்புக்கள் பெருகுகின்றன. நாட்டின் பாதுகாப்பு பலப்படுகிறது. பொறி இயல், விஞ்ஞானத் துறைகளில் மிகுந்த முன் னேற்றம் ஏற்படுகிறது. பொருளாதாரம் கொழிக்கிறது. இன்னும் என்ன வேண்டும்?

விண்வெளித் தளங்கள் அமைக்கப்படும் போது வான வெளி நட்சத்திரங்களின் ஆராய்ச்சி, சீதோஷ்ண நிலைகளின் ஆராய்ச்சி ஆகியவற்றுக்கு அவை உதவும். அதோடு பூமி மட்டத்தில் குணப்படுத்த முடியாத பல வியாதிகள் விண்வெளியின் எடையற்ற நிலையில் குணமாகி விடும் என்று டாக்டர்கள் கருதுகிறார்கள்!

ஏன், ஒருசில வருஷங்களுக்கு முன், முதல் செயற்கைச் சந்திரனை ருஷ்யா உலகைச் சுற்றி வர அனுப்பியபோது வெகு சீக்கிரம் இத் தகைய செயற்கைச் சந்திரன்கள் உலகை உள்ளங் கை அகலமுள்ளதாக்கி விடும் என்று யார்தான் கனவு கண்டிருக்க முடியும்? ஆனால் உண்மையில் அப்படித்தான் நடந்து வருகிறது. அமெரிக்க டாக்டர் புரியும் நுணுக்கமான இருதய ஆபரேஷனை அதே சமயத்தில் ஜெனிவாவில் உள்ள டாக்டர்கள் கலர் டெலிவிஷனில் காண முடிகிறது. ஜெர்மானிய பிரதமர் அமெரிக்க மக்க ளிடம் நேருக்கு நேராக டெலிவிஷனில் பேசலாம்! கனடாவில் பாங்கைக் கொள்ளை யடித்துவிட்டு அமெரிக்காவின் தென் கோடி யில் ஒளிந்து கொண்டவனை, அவன் புகைப் படத்தை உலகெங்கணும் டெலிவிஷனில் காண்பித்ததன் விளைவாகக் கண்டுபிடிப் பது மிக எளிதான காரியமாயிற்று. டோக்கியோவில் நடந்த ஒலிம்பிக் விளையாட் டுக்களை உடனுக்குடன் பிரிட்டனில் காண முடிந்தது. இப்படி உலகில் எந்த மூலையி லிருந்து எந்த மூலைக்கு வேண்டுமானாலும் செயற்கைச் சந்திரன் மூலம் டெலிவிஷன் தொடர்பு கொள்ளலாம் என்னும்போது அதனால் ஏற்படக் கூடிய அநுகூலமான விளைவுகளை அளவிட்டுக் கூறுவது எங்ஙனம் சாத்தியமாகும்?

இன்னும் வருங்காலத்தில் விண்வெளியை மேலும் மேலும் வெற்றி கொள்ளும்போது விஞ்ஞானிகள் என்னென்ன அற்புதங்களை யெல்லாம் சாதிப்பார்களோ? பொறுத் திருந்துதான் பார்க்க வேண்டும்.

# பின்னியின் D-318 பற்றிய இரண்டு கருத்துக்கள்

**அம்மா சொல்வது :-**

D 318 நீடித்து உழைக்கிறது; பள்ளிக்கூட யூனிபாரங்களுக்கு மிகவும் சிறந்தது. சிறுவரின் கடினமான உபயோகத்திற்கு ஈடு கொடுக்கும் துணி இதுதான்.

**குழந்தைகள் சொல்வது :-**

யூனிபாரம் அணிந்தபடியே நாங்கள் விளையாட்டுகளில் ஈடுபட்டால் அம்மா எங்களை ஒன்றும் சொல்வதில்லை. ஏனெனில் அவை சிறிதும் கெடாமல் நீடித்து உழைக்கும் என்பது அவளுக்கு நன்ருகத் தெரியும்.

நினைவிருக்கட்டும். பள்ளிக்கூட யூனிபாரங்களுக்கென்றே பல வண்ணங்களில் D 318 கிடைக்கிறது.




உங்களுக்குத் தேவையான பின்னி துணிகளை இந்த அடையாளம் காணும் அனுமதிபெற்ற விற்பனையாளரிடமிருந்து கண்ட்ரோல் விலைக்கு வாங்குங்கள்.

பக்கிங்ஹாம் & கர்னாடிக் கம்பெனி லிமிடெட்.
பின்னி & கம்பெனி லிமிடெட், மதராஸ், ஸ்தாபனத்தின் ஒரு கிளை.

JWT-BY-3127

# அவள் எங்கே? 12

கதை கௌசிகன்
சித்திரம்: ரமணி.










சந்துரு அவர்களுக்குத் தைரியம் கூறி அனுப்பி வைக்கிறான்.






மாலதியின் வழக்கில் தீவிரமாக ஈடுபடுகிறார்கள் தம்பதியும் சந்துருவும் அவன் நண்பன் சேகரும். முதல் படியாக தோட்டம் அறை அவர்கள் சோதனைக்கு உள்ளாகிறது....



பலரைத் தன் கேள்விகளால் துளைத்தெடுத்து விஷயங்களைச் சேகரிக்கிறான் சந்துரு. துப்பராவோரா டேவ் அறைகளில் உள்ளோரின் தேவைகளைக் கவனிக்கும் ஒரு பையன் முக்கியத் தகவல் ஒன்றைத் தருகிறான்..



புதை பொருள் ஆராய்ச்சியாளர் தன்னிடம் அகப்பட்ட பல துண்டுகளை வைத்துக் கொண்டு அதை ஒன்று சேர்த்து உருவம் கொடுத்து ஒரு முடிவுக்கு வருவதைப் போல, சந்துருதான் சேகரித்த பல விஷயங்களை ஒன்றுக்கொன்று தொடர்பு படுத்திப் பார்த்து முடிவைக் குழப்பிக் கொள்கிறான்












தொடரும்-

# டி வி எஸ் வினியோகிக்கும்










# நம்பிக்கைக்கு உகந்த, தரத்தில் உயர்ந்த மோட்டார் உறுப்புகள்

டிவிஎஸ் வினியோகிக்கும் மோட்டார் உறுப்புகள் பரிசீலனை செய்யப் பெற்று, தேர்ந்த பிறகுதான் விற்கப்படுபவை இந்த உண்மையை பஸ், லாரி, கார் சொந்தக்காரர்கள் நன்கு அறிவர் ஆகையால்தான் டிவிஎஸ் வினியோகிக்கும் உறுப்புகளையே அனைவரும் வாங்குகிறார்கள்.

## டிவிஎஸ் வினியோகிக்கும் நம்பகமான இதர மோட்டார் உறுப்புகள்:

| | | | |
|---|---|---|---|
| | | | **Standard** Battery<br>ஸ்டாண்டர்டு பேட்டரி |
| <br>Springs and Leaves<br>கானரா ஸ்பிரிங்குகள், லீவுகள் | BORG & BECK<br>Clutch & Spares<br>போர்க் & பெக் கிளட்ச், ஸ்பேர்கள் | MICO Fuel Injection Parts<br>மைக்கோ பியூயல் இன்செக்ஷன் பார்ட்டுகள் | <br>டபிள் கேப ப்ரஸிஷன் பார்ட்டுகள் |
| <br>Tie Rod Ends<br>QHR<br>டை ராடு எண்டுகள் | <br>ட்ரான்கோ வால்வுகள் | <br>Horns<br>ஹெல்லா ஹாரன்கள் | ROLON<br>Timing Chains<br>ரோலான் டைமிங் செயின்கள் |
| <br>KAP<br>ஆட்டோ பார்ட்டுகள் | Fenner<br>Fan Belts<br>பென்னர் பான் பெல்டுகள் | <br>Filter Elements<br>ப்ரிட்ஸ் பில்டர் எலிமெண்டுகள் | <br>Bulbs<br>அல்லைட் பல்புகள் |

டி. வி. சுந்தரம் அய்யங்கார் & ஸன்ஸ் பிரைவேட் லிமிடெட்
மதுரை-திருச்சி-திருநெல்வேலி-புதுக்கோட்டை-சேலம்
கோயமுத்தூர்-திருவனந்தபுரம்



சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிமிடெட்,
மதராஸ்-பெங்களூர் செகந்திராபாத் (டெக்கான்)

மதராஸ் ஆட்டோ சர்வீஸ் பிரைவேட் லிமிடெட்,
மதராஸ்-பெங்களூர்

# ஒரு உத்தம்

## ஜெகசிற்பியன்

### அத்தியாயம் இருபத்தாறு

## சஞ்சீவி கல்பம்

அன்றுமாலே ஐந்து மணிக்கெல்லாம் தன் வேலேயை முடித்துக் கொண்டு, ஹோட்டலிலும் பார்க்கிலுமாகக் கொஞ்ச நேரத்தைக் கழித்துவிட்டு இரவு ஏழரை மணிவாக்கில் ரோஸியின் வீட்டுக்கு வந்து சேர்ந்தான் சபேசன்.

ரோஸ்லின் அப்போது வெளியில் எங்கோ போயிருந்தாள். கிழவி மிஸி மட்டும் வராந்தாவில் உலாவிக்கொண்டிருந்தாள். சபேசன் வந்ததைக் கவனித்த அவள், ''ஏ, பாய்!'' என்று கூப்பிட்டாள். பட்லரைக் கூப்பிடுகிறுளாக்கும் என்று எண்ணிய சபேசன், மௌனமாக நின்றுன்.

''உன்னேத்தான் பையா, கம்ஹியர்!''

சட்டென்று திரும்பி அவளருகில் விரைந்து சென்றுன் சபேசன்.

''பட்லர்கிட்டே துட்டு வாங்கிக்கினு தெரு மேலே போய், த்ரீ பைஸ் கேய்ங், த்ரீ பைஸ் வேர்க்கள்ளே வாங்கியா!''

இதைக் கேட்ட சபேசன் எவ்வித மனச் சுளிப்பும் கொள்ளவில்லே. வயதான அவனுக்கு இம்மாதிரி ஏதேனும்



குற்றேவல் செய்வது ஒரு பெருமையான காரியம் என்றே நினைத்தான். இத்தகைய சந்தர்ப்பத்தை அவன் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டு மிருந்தான். அமைதியாகவும் நிம்மதியாகவும் படுத்துத் தூங்க இடம் அளித்திருக்கும் அவளுக்கும், அவளது மகளுக்கும் தன் நன்றிக் கடனை எந்த வகையிலேனும் செலுத்திவிட வேண்டும் என்று அவன் எப்போதும் தயாராகவே யிருந்தான். ஆனால் அந்தக் கிழவி மிஸி அவனைக் கூப்பிட்ட தோரணைதான் அவன் மனத்தை என்னவோ செய்தது. கடந்த நான்கு நாட்களாக இல்லாத இப்புதிய நிலைமைக்குக் காரணம், நேற்றிரவு தன்னைப் பற்றி ரோஸி கேட்டுத் தெரிந்து கொண்ட தகவலே என்பதும் அவனுக்குப் புரிந்து விட்டது. ஆயினும், அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல் பட்லரிடம் போய் விவரத்தைச் சொல்லிக் காசு கேட்டான். அவன் வேர்க் கடலை, கிழங்கு வாங்க ஓரணா கொடுத்ததோடு தனக்கும் அரையணா பீடி வாங்கி வர உத்தரவிட்டான்!

அன்றிரவு சபேசனுக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. பின்பக்கத் தாழ்வாரத்தையொட்டிக் கட்டப்பட்டிருந்த சாக்கடைத் தொட்டியின் நாற்றமும், அதிலிருந்து வீரானந்த கோஷத்துடன் உதிரபானம் செய்யப் படையெடுத்து வரும் கொசுக்களும் அவனது உறக்க போதையைத் தட்டித் தெளிவித்து விரட்டிக் கொண்டே யிருந்தன. பற்றாக்குறைக்குப் பக்கத்திலேயே கோழிக்கூண்டு வேறு இருந்தது. அதில் அடைபட்டிருந்த கோழிகள் ஒன்றோடொன்று சண்டை போட்டுக் கொண்டு கூவிக்கொண்டிருந்தன. அந்த வீட்டின் முன்புறம் எத்தனைக் கெத்தனை அழகாகவும் சுத்தமாகவும் இருந்ததோ, அதற்கு முற்றிலும் மாறாகப் பின் பகுதி கிடப்பதைக் கண்டு அவன் உள்ளூற வியப்பும் வெறுப்பும் அடைந்தான். இதைவிடக் கன்னியம்மாளின் வீட்டுப் புறக்கடை எவ்வளவோ மேல் என்று அவனுக்குத் தோன்றியது.

கண்கள் தூக்கத்தைத் துறக்கும்போது மனம் வலியச் சென்று கவலைகளை வாரிப் போட்டுக் கொள்வது இயற்கை அல்லவா? இத்தனை நாட்கள் இல்லாத கவலைகளெல்லாம் இப்போது அவன் மனத்தில் ஏகமாக வந்து குவிந்துகொண்டு அவனைப் பாடாய்ப் படுத்தின. எப்படியோ அன்றிரவைக்








# மீண்டும்
# பயர்ஸ்டோன்
# முதலிலே

---

## தந்துவிட்டது: பிரபல
# 'ராப்-அரவுண்ட்'
## டிரெட்

இதோ! மோட்டார் கார் டயர்களிலேயே உன்னதமான முன்னேற்றம் என உலகெங்கும் போற்றப்படும் 'ராப்-அரவுண்ட்' இப்போது பயர்ஸ்டோன் டீலக்ஸ் சாம்பியன் டயர் மூலம் உங்களுக்குக் கிட்டுகிறது. மகத்தான இந்த டயரின் ரகசியம்: முக்கிய வரைப்புகள் ஐந்தும், பக்கத்தோள்களில் இரண்டுமாக, ஏழு வரைப்புகள் கொண்டு, நிலையுறுதி, பாதுகாப்பு, சிக்கனம் மூன்றிலும் புதுமை புகுத்தியுள்ள புரட்சிகரமான டிரெட். இப்புதிய 'ராப் அரவுண்ட்' டிரெட், சாலைமீது அதிக ரப்பர் பரப்பினைப் பதியச் செய்து, அதிகப் பிடிமானமும், கூடுதலான இழுதிறனும், முனைதிரும்புவதிலே அதிகப் பாதுகாப்பும் அளித்து, அதிக நாள் உழைக்கிறது. வட்டமிடாத தோளமைப்புள்ள, முழு நிறைவு பெற்ற டயரான பயர்ஸ்டோன் டீலக்ஸ் சாம்பியன், பாதுகாப்பிலே ஒரு புதுத் தரம் வகுத்து, மற்றவகை டயர்களை மதிப்பிட ஓர் அளவுகோலாகத் திகழுகிறது.







**1** உயர் சேவைக்கான பாதுகாப்பு டிரெட்

**2** அதிக அகலமுள்ள 'ராப்-அரவுண்ட்' டிரெட் அமைப்பு

**3**

## அமைப்பிலே நூதனம்—உழைப்பிலே அற்புதம்!

சக்கரம் சுழலும் இடமெல்லாம்  **பயர்ஸ்டோன்** தரத்திற்கும் சேவைக்கும் உங்கள் சின்னம்

கழித்து அதிகாலையிலேயே எழுந்து போய் விட்டான்.

பகலெல்லாம் தெருத் தெருவாகச் சுற்றியலைந்து இரண்டு ரூபாய் நஷ்டத்தோடு ஜல்லி வியாபாரத்தை முடித்துக் கொண்டு உள்ளமும் உடலும் சோர ரோஸியின் வீட்டுக்குத் திரும்பிய சபேசன் வராந்தா ஓரம் வந்து ஒதுங்கி நின்றான்.

''என்ன மேன், இன்னும் உனக்கு ஸாங் கம்போஸ் பண்ண 'மூடு' வரலையா?'' என்று குறும்புப் புன்னகையுடன் கேட்டுக் கொண்டே தன் செல்ல நாயைத் தூக்கிக் கொஞ்சியபடி வெளியில் வந்தாள் ரோஸி.

அசட்டுச் சிரிப்புடன் தலை குனிந்து கொண்டு மௌனமாக நின்றான் சபேசன்.

''இன்னைக்கும் மிஸ்டர் நாச்சை நீ 'மீட்' பண்ணலியா?''

''இல்லே, மேடம்!''

அலட்சியமாகத் தலையாட்டிக்கொண்டே ரோஸி தன் நாயுடன் விளையாட ஆரம்பித்தாள். அதன் முகத்தோடு முகம் சேர்த்துக் கொஞ்சப் போனவள், ''சீச்சீ! அந்த ஸ்டுப்பிட் சோக்ரா பாய் இன்னைக்கு இதைக் குளிப்பாட்டலே போலிருக்குதே?.... என்ன டர்ட்டி! என்ன பேட்-ஸ்மெல்!'' என்று முகத்தைச் சுளித்தவாறு நாயைப் பிடித்துத் தூரத் தள்ளியவள் சபேசனைப் பார்த்து, ''மிஸ்டர்! கொஞ்சம் பிளீஸ்பண்ணி இந்த 'டாக்'கைக் குளிப்பாட்டிக்கோ! அதோ அங்கே சோப்பும் டவலும் இருக்குது; எடுத்துக்கோ! டோண்ட் அஃப்ரைய்ட்! இது 'பைட்' பண்ணாது; சும்மா 'பார்க்' பண்ணும்—அவ்வளவேதான்!'' என்றாள்.

''ஆகட்டும், மேடம்!'' என்று முனகிய சபேசன் அந்தச் சடை நாயைத் தூக்கிக்கொண்டு தண்ணீர்த் தொட்டியை நோக்கி நடந்தான்.

நாயைக் குளிப்பாட்டி எடுப்பதற்குள் அவன் அணிந்திருந்த சட்டை, பைஜாமா எல்லாம் தெப்பமாக நனைந்து விட்டன. ஆனால் சட்டையின் பித்தான் பகுதி மட்டும் நனையாமல் பார்த்துக் கொண்டான். சாப்பாட்டு அறையில் நாற்காலிகளைப் பின்னால் நகர்த்தும் ஒலி கேட்டது. ரோஸியும் அவள் தாயாரும் இரவு உணவை முடித்துக் கொண்டு எழுந்து போகிறார்கள் போலும்.

ஈரம் சொட்டிய உடையை உடம்போடு பிழிந்துவிட்டுக் கொண்டு குளிரில் நடுங்கியபடியே சமையலறை சன்னலோரம் போய் நின்று உள்ளே எட்டிப் பார்த்தான் சபேசன்; படுக்கப் போகுமுன் அதற்கு அனுமதி கோரும் வகையில் பட்லரைப் பார்த்து ஒரு புன்னகை புரிவது வழக்கம். ஏனென்றால் நிலைமை திடீரென்று எப்படி மாறுமோ என்ற சந்தேகம் அவனுக்கு எப்போதும் இருந்துகொண்டேயிருந்தது.

''வாட், ஜானி! நாயைக் குளிப்பாட்டிட்டியா? சரி; இப்படி வா!'' என்று பீடியைப் பல்லிடுக்கில் கடித்துக் கொண்டு வேலையில் ஜரூராக இருந்த பட்லர் குரல் கொடுத்தான்.

அந்தப் பட்லரின் மேல் சபேசனுக்கு நல்ல அபிப்பிராயமே. ஆனால் அவன் 'ஜானி' என்று அழைப்பதுதான் அவனுக்கு அறவே பிடிக்காமல் இருந்தது. அதை வாய்விட்டுச் சொல்லவும் பயம். தயக்கத்துடன் சமையலறை வாசலருகில் போய் நின்றான்.

''இந்தா ஜானி! இந்தப் பிளேட்டுகளைக் கொஞ்சம் வாஷ் பண்ணிக்கொடுத்துடு'' என்றவாறு அப்போதுதான் டைனிங் மேசையிலிருந்து எடுத்துவந்து வைத்திருந்த பீங்கான் தட்டுக்களைக் காட்டினான் பட்லர்.

சபேசன் சற்றே தயங்கினான். 'மாதவன் நாயர் டீக்கடையில் இதைவிட இன்னும் மோசமான வேலைகளையெல்லாம் செய்திருக்கிறோமே' என்ற நினைவு வந்தது அவனுக்கு. மௌனமாகப் போய் அந்த எச்சில் தட்டுக்களையெல்லாம் கழுவ ஆரம்பித்தான்.

மணி ஒன்பதுக்கு மேல் ஆகிவிட்டது; தட்டுக்களை ஒருவாறு கழுவி வைத்துவிட்டு நிமிர்ந்தான் சபேசன்.

''ஜானி, நீ ரொம்ப நல்ல பையன்!'' என்று பாராட்டிய பட்லர், ''ஒரு குட் நியூஸ் சொல்றேன், கேட்கிறயா? இங்கே வேலை செய்துக்கிட்டிருந்த சோக்ரா பாய் திடீர்னு நின்னுட்டான். உன்மேலே நம்ப மிஸிக்கு ரொம்பப் பிரியமாப் போச்சு. அதனால் உன்னையே அந்த வேலைக்கு வைச்சுடலாம்னு நினைக்கிறாங்க. நானும் ரெக்கமண்ட் பண்ணியிருக்கிறேன். மாசம் பதினைஞ்சு ரூபாய் சம்பளம். நல்ல சாப்பாடும் கிடைக்கும். வாட் யூ சே?''

திடுக்குற்றவன் போல் அவனை நிமிர்ந்து பார்த்த சபேசன் சட்டென்று தன்னைச் சமாளித்துக் கொண்டு ஒரு போலிச் சிரிப்புடன், ''இது பற்றி நாளைக்கு யோசித்துச் சொல்கிறேன், அண்ணே!'' என்றவாறு அங்கிருந்து மெல்ல நழுவிப் பின்புறத்துத் தாழ்வாரத்துக்கு வந்து ஜமக்காளத்தை விரித்துப் போட்டுக்கொண்டு உட்கார்ந்தான். அவனுக்கு ஏனோ வாய் விட்டு அழ




"இதுவரை தாலாட்டுப் பாடல்களைப் பாடியவர் சுப்பிரமணிய பாகவதர் அவர்கள்!......"

வேண்டும் போல் இருந்தது. குத்துக் காலிட்டு முட்டிகளுக்கிடையில் முகத்தைப் புதைத்துக் கொண்டு விம்மிப் பொருமினான்.

அந்தப் பின்கட்டுத் தாழ்வாரத்துக்கு நேர் பக்கவாட்டில் ரோஸியின் படுக்கை அறை இருந்தது. ஓர் ஒற்றைக் கட்டில், ஒரு சிறு புத்தக அலமாரி, அதன் மேல் ஒரு கண்ணாடிப் பூந்தொட்டி, ஒரு சாய்வு நாற்காலி, ஒரு மேஜை, ஸ்டூல் ஒன்று — இவ்வளவே அங்கு இருந்தன. அவள் மட்டும் அவ்வறையில் படுப்பாள் போலும். வெளிப்புறச் சன்னல்களுக்கு அழகிய திரைச் சீலைகள் போடப்பட்டிருந்தன. பின்புறத் தாழ்வாரப் பக்கமிருந்த ஒற்றைச் சன்னலுக்குத் திரை இல்லை. அதனால் படுக்கையறையின் மின் விளக்கொளி அந்த ஜன்னல் வழியே, இருண்டு கிடந்த தாழ்வாரத்தில் கீற்றுக் கீற்றாக விழுந்திருந்தது.

அன்று சனிக்கிழமை. மணி பத்தாகி விட்டது. இரவு நேர உடையுடன் அவ்வறைக்கு வந்த ரோஸி, மேசை மீதிருந்த ரேடியோவை இயக்கிவிட்டு விட்டு ஒரு புத்தகத்துடன் சாய்வு நாற்காலியில் அமர்ந்து ஸ்டூலின் மேல் இரண்டு கால்களையும் நீட்டிக்கொண்டு சாய்ந்தாள். ரேடியோவில் — ஐரோப்பிய சங்கீத நிகழ்ச்சியில் — 'லிஸ்னர்ஸ் சாய்ஸ்' அப்போது நடைபெற்றுக் கொண்டிருந்தது. புத்தகத்தைப் பிரித்துச் சில வரிகள் படிப்பதும், பிறகு பாட்டைக் கேட்பதுமாக இருந்தாள். விரும்பிக் கேட்ட பாடல்கள் ஒலிபரப்பாகிக் கொண்டிருந்த அந்த நிகழ்ச்சியில் ரோஸியும் ஏதோ ஒரு பாட்டை ஒலிபரப்பும்படி எழுதிக் கேட்டிருந்தாள் போலும், ஆங்கிலோ — இந்தியர்கள் அதிகமாக வசிக்கும் இடங்களான தாம்பரம், நுங்கம்பாக்கம், வேப்பேரி, பெரம்பூர், ஜார்ஜ் டவுன், ராயபுரம் முதலான ஊர்ப் பெயர்களை அறிவிப்பாளர் சொல்லும்போதெல்லாம் அவள் நிமிர்ந்து உட்கார்ந்து, வேப்பேரி நேயர்கள் விரும்பிக் கேட்ட பாடலின் முதல் வரியை ஊன்றிக் கவனித்தாள். சில சமயம் தனக்குத் தெரிந்த பாட்டு இசைக்கப்படும் போது கூடச் சேர்ந்து பாடினாள்.

கவலையே கவலைப்படும் அளவுக்குக் கவலையில் ஆழ்ந்து இருளில் முடங்கி உட்கார்ந்து கொண்டிருந்த சபேசனுக்கு, இது கொஞ்சம் ஆறுதல் அளிப்பதாக இருந்தது. சுவரில் சாய்ந்தவாறே அந்தப் பாட்டுக்களைச் செவிமடுத்துக் கொண்டிருந்தான். ஆனால் ஐந்தாறு பாட்டுகளுக்கு மேல் கேட்க அவனுக்குச் சலிப்பாகி விட்டது. செவிகளில் ஒருவிதக் குடைச்சல் எடுப்பது போலிருந்தது. படுத்துவிடலாமா என்று எண்ணினான். உட்கார்ந்திருக்கும் போதே, கொசுக்கள் அவனை மொய்த்துப் பிடுங்கின. படுத்தால் கேட்க வேண்டுமா? தூக்கமும் வரவில்லை.

ஏதோ நினைவு வரப் பெற்றவன் போல் தன் ஜேபியில் மடித்து வைத்திருந்த ஒரு காகிதத்தை எடுத்துக் கொண்டு வெளிச்சம் வரும் சன்னலருகில் நகர்ந்து போய்ப் பிரித்துப் பார்த்தான். பதினாறு பக்கங்களாகத் தமிழில் அச்சிடப்பட்ட ஒரு 'டபுள் கிரௌன்' அளவு முழுக் காகிதம் அது. ஏதோ ஓர் அச்சகத்தில் வாங்கிய ஜல்லியுடன் சேர்ந்து வந்திருந்த அதனைப் படித்துப் பார்க்கலாமே என்று எடுத்து வைத்திருந்தான். நேரத்தைப் போக்க இப்போது அவனுக்கு அது பயன்பட்டது.

அந்த முழுக் காகிதத்தை எட்டாக மடித்து, 'தலை—வயிறு' ஓரங்களை விரலால் கிழித்துவிட்டுப் பக்க எண்களை நோட்டமிட்டான். அறுபத்தைந்தில் தொடங்கித் தொண்ணூற்றாறில் முடிய முப்பத்திரண்டு பக்கங்களாக 'இம்போஸ்' பண்ணப்பட்டு, முதல் பதினாறு பக்க 'பாரத்தை' மட்டும் காகிதத்தின் ஒருபுறத்தில் அச்சிடப்பட்டிருந்ததால் பக்கங்கள் ஒன்று விட்டு ஒன்று வெறுமையாய் இருந்தன. ஆனாலும் அவன் வாய்க்குள்ளாகவே அதைப் படிக்கத் தொடங்கினான்:

முதல் பாராவைப் படித்ததுமே அது ஒரு நாவல் என்பது தெரிந்துவிட்டது. ஆனால் ஐந்தாறு பக்கங்களுக்கு மேல்

# "இதோ பார்! ஒரு பாரி மிட்டாய் எடுத்துக் கொள்ளேன்"

ருசி மிக்கதாய், புஷ்டி சத்து நிறைந்ததாய் உள்ள பாரி மிட்டாய்கள் குழந்தைகளையும், பெரியோரையும் கவர்ந்து விடுகின்றன. நீங்கள் இருக்கும் இடம் எதுவாயினும், புரியும் தொழில் எதுவாயினும் பாரி மிட்டாய்களை நிச்சயம் விரும்பி மகிழ்வீர்கள். அவற்றைச் சில்லறையாகவோ வண்ணச் சித்திரம் கொண்ட டின்களாகவோ வாங்கி, பிறருடன் ருசித்து மகிழுங்கள். பாரி மிட்டாய் இருக்க, வாழ்க்கை மேலும் இனிக்கிறது.




**பாரிஸ்—உயர்தர மிட்டாய்களைத் தயாரிப்பவர்கள்.**

ருசித்திருக்கிறீர்களா? ஜிஞ்சர் கேப்ஸ் • சூபர் பட்டர்ஸ்காட்ச்

டெவன் கிரீம் டாஃபி • லாக்டோ பான்பான்ஸ்

பாரிஸ் கன்பெக்ஷனரி லிமிடெட், மதராஸ்

JWT-PRS 3206A

# மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான

# ஹெடன்ஸா

உபயோகித்து
நிவாரணம் அடையுங்கள்

—ரணசிகிச்சையையும்
தடுங்கள்

பொறுக்க முடியாத வலியா? தாங்க முடியாத அரிப்பா? எரிச்சலெடுக்கும் உணர்ச்சியா? ரத்தக் கசிவா? உடனடியாக சிகிச்சை செய்யத் தாமதியாதீர்கள்! அலட்சியம் செய்தால், நோய் முற்றி ரணசிகிச்சை செய்ய வேண்டிவரும். 108 தேசங்களிலுள்ள டாக்டர்களால் சிபாரிசு செய்யப்பட்ட, நம்பிக்கையான ஜெர்மன் மூலநோய் களிம்பு ஹெடன்ஸா உபயோகித்து இப்பொழுதே நிவாரணம் பெறுங்கள்! ஹெடன்ஸா வலியையும் அரிப்பையும் சீக்கிரம் நிறுத்தி, மலப் பிரவிருத்தியைச் சுலபமாக கஷ்டமில்லாமல் செய்கிறது. முக்கியமாக, ஹெடன்ஸாவிலுள்ள சக்திவாய்ந்த மருந்துப் பொருள்கள் நீடித்த நிவாரணமளிப்பதோடு, வெடிப்புகளைச் சுருங்கச் செய்து, ஆரோக்கியமான தசைகளை வளர்க்கிறது. மூலநோய்க்குக் காலாகாலத்தில் ஹெடன்ஸா உபயோகித்தால் பிற்காலத்தில் ரணசிகிச்சை செய்யவேண்டிய நிலை ஏற்படாது என்பது ஞாபகமிருக்கட்டும்.

ஹெடன்ஸாவில் உணர்வழிக்கும் மருந்துகள் ஒன்றும் கிடையாது.

ஒரிஜினல் ஜெர்மன் முறைப்படி
இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

## தி டாலர் கம்பெனி

337, தம்பு செட்டி தெரு,
சென்னை-1

பிரபல மருந்து வியாபாரிகளிடம்
கிடைக்கும்.

83-DOL-2-A TM




**வாணி தமிழ் இங்கிலீஷ் போதினி**
90 நாட்களில் தமிழ் மூலம் ஆங்கிலம் நாமே இலக்கணமாகப் படிக்க பேச, எழுத, சுலபமாகக் கற்க பெரிய புத்தகம்.
விலை தபால் செலவோடு ரூ. 6.25.

**ஜுகவரியம் (குடிசைத் தொழில்)**
சோப், இங்கி, பத்தி, ஸ்னோ போன்ற 206 புதுத் தொழில்கள் அடங்கியது.
விலை ரூ. 4-00. வி. பி. 0-85.

**தமிழ் ஹிந்தி சுபோதினி**
தமிழ் மூலம் சுலபமாக **ஹிந்தி** படிக்க பேச, எழுத, கற்க முடியும்.
விலை ரூ. 2-50. வி. பி. 0-85

**குடும்ப இலகு வைத்தியம்**
பச்சிலை மூலிகைகள் கொண்டு ஆரோக்கியம், பலம்பெற வழிகாட்டும்.
விலை ரூ. 2-50. வி. பி. ரூ. 1-00.

**மாட்டு வாகடம் (பசு வைத்தியம்)**
விலை ரூ 2-00. வி. பி. 0-85.

| | |
|---|---|
| விக்கிரமாதித்தன் கதை | விலை ரூ. 5.00 |
| ஹஸ்தரேகை சாஸ்திரம் | விலை ரூ. 3.00 |

தபால் செலவு தனி

## வாணி புக் டிபோ (K)

3, மலையபெருமாள் தெரு, சென்னை-1

## பருக்கள் மறைந்து விடுகின்றன

சருமம் மிருதுவாகவும் மென்மையாகவும் ஆகிவிடுகிறது

நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகித்தால் முகப் பருக்கள் எல்லாம் மறைந்து விடுகின்றன. இன்றிரவு நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகியுங்கள். உங்கள் சருமம் மிருதுவாகவும் வழவழப்பாகவும் மாக மறுவின்றியும் ஆவதைக் காண்பீர்கள். நிக்ஸோடெர்ம் (Nixoderm) சருமத்தின் மீது ஏற்படும் முகப்பருக்கள் கட்டிகள் செந்நிறத் தழும்புகள் மேலாகப் பரவும் படை, படர்தாமரை வெடிப்புகள் முதலிய உபாதைகளுக்குக் காரணமான கிருமிகளையும், பூச்சிகளையும் அழிக்க விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது. உங்கள் சருமத்தின் மெல்லிய துவாரங்களில் இருக்கும் பூச்சிகளையும், கிருமிகளையும் அழித்தாலன்றி உங்கள் சரும உபாதைகள் விலகா. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். முகப்பருக்களை மறையச் செய்து சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் இருக்கச் செய்யும் என்ற பூரண நம்பிக்கையுடன் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள்.

படித்ததும் அவனுக்கு ஒன்றுமே புரிய வில்லே. அது எப்படிப் புரியும்? சில நாவல்களை முழுவதுமாகப் படித்தாலுமே ஒன்றும் புரியாமல் இருக்கும் போது இந்த ஆதியும் அந்தமுமற்ற நாவலேப் பக்கம் விட்டுப் பக்கம் படித்தா புரிந்து கொள்ள முடியும்? ஆயினும் அவன் ஒரு விஷயத்தை மாத்திரம் நன்கு புரிந்து கொண்டான். அதாவது, அந்நாவலே எழுதிய ஆசிரியர் பொன்மொழிகளை உதிர்ப்பதிலே தணியாத வேட்கை கொண்டவராக இருந்தார். சமய சந்தர்ப்பம், பாத்திரங்களின் குண விசேஷம், அவற்றின் தரம், தகுதி ஆகிய எதையுமே சட்டை செய்யாமல் பாராவுக்குப் பாரா, பேச்சுக்குப் பேச்சு பொன்மொழிகளாகப் பொழிந்து தள்ளி வைத்திருந்தார். பொன்மொழிகளைச் சொல்லியே வாசகர்களைப் பயமுறுத்திப் பிரமிக்கச் செய்துவிடலாம் என்பது அவருடைய எண்ணம் போலும்! அல்லது பொன் மொழிகளை அடுக்கிவிட்டால், தம்மைப் பெரிய சிந்தனையாளர், மேதை, இலக்கிய சாம்ராட் என்றெல்லாம் ஜனங்கள் நம்பிவிடுவார்கள் என்பது அவரது அசட்டு நம்பிக்கையாகவும் இருக்கலாம். அந்த நாவலாசிரியர் உதிர்த்து வைத்திருந்த சில பொன்மொழிகளே அவருடைய வண்டவாளத்தைத் தண்டவாளம் ஏற்றிக் கொண்டிருப்பதை உள்ளூற எண்ணிச் சிரித்துக் கொண்டான் சபேசன். ஆமாம்! உலகத்து மேதைகள் பலரது கருத்துக்களைச் சொல் மாற்றம் செய்து தம் சொந்தப் பொன்மொழிகள் போல் அதிலே 'பெய்து' வைத்திருந்தார் அவர். பாவம், இந்தப் பொன் மொழிகளையெல்லாம் சேகரித்து எழுதி வைத்துக் கொள்ள எத்தனை நாற்பது பக்க நோட்டுக்களைப் பயன்படுத்தினரோ!...

சபேசனுக்கு எரிச்சல் மூண்டது. அந்த 'மூளி நாவல்' பக்கங்களைக் கிழித்து விட்டுச் சுவரில் சாய்ந்து கொண்டான்.

மணி பதினென்று. ரேடியோவில் இசை நிகழ்ச்சி முடிந்து, ஐந்து நிமிஷத்துக்கு ஆங்கிலச் செய்தி அறிக்கை வாசிக்கப்பட்டது. அவனுடைய பார்வை சன்னல் வழியே அந்தப் படுக்கையறையை நோக்கிச் சென்றது. ரோஸி இன்னமும் ஸ்டூலின்மேல் கால்களை நீட்டிக்கொண்டு சாய்வு நாற்காலியில் சாய்ந்தவாறு புத்தகம் படித்துக் கொண்டிருந்தாள்.

ஒரு பெண் தனித்திருக்கும் அறையினுள் எட்டிப் பார்ப்பது முறையல்ல என்று எண்ணியவனய்ப் பின்னல் நகர்ந்து கொண்டான் சபேசன்.

ரேடியோவில் செய்தி அறிக்கைக்குப் பின் வானிலே ஹேஷ்யங்கள் கூறி, 'ஜெய் ஹிந்த்' என்ற வீர வணக்கத்தோடு நிகழ்ச்சிகள் முடிவடைந்தன. தேசிய கீதம் ஒலிக்க ஆரம்பித்தது.

சிந்தனையில் ஆழ்ந்தவனய்த் தலை குனிந்து இருளில் உட்கார்ந்திருந்த சபேசன், ஏதோ சஞ்சீவி கல்பத்தை உட்கொண்டவன்போல் சடாரெனத் துள்ளியெழுந்து ஒரு போர் வீரன் மாதிரி விறைத்து நின்ருன். அவன் உடல் புல்லரித்தது. அந்த இருட்டிலும் அவனுடைய முகம் ஒளி நிறைந்து விகசித்தது. தன் வாய்க்குள்ளாகவே 'ஜனகண மன அதி நாயக ஜய ஹே...' என்று மெல்லப் பாடினன். அவனது உடலின் மயிர்க்கால்கள் ஒவ்வொன்றும் குத்திட்டு நின்றன. கீதத்தின் கடைசி வரி, உச்சஸ்தாயியில் ஒங்கியது!...

சபேசனின் கண்கள் அந்த அற்புதப் பாடலை இசைக்கும் ரேடியோவை நோக்கிச் சென்றன. அங்கே இன்னமும் ரோஸி தன் கால்களை ஸ்டூலின் மேல் நீட்டிச் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டுதானிருந்தாள்.

அதைப் பார்த்த சபேசன் திடுக்குற்ருன். அவன் உடல் பதறித் துடித்தது. கண்கள் கோபாக்கினியைக் கக்கின. சடாரெனக் குனிந்து, தாழ்வாரத்தில் அவன் காலடியில் கிடந்த பீங்கான் தட்டை வெடுக்கென்று எடுத்தான். அது கோழிகளுக்குத் தண்ணீர் வைக்க உபயோகப்படுவதாயிருக்கலாம். வெறி பிடித்தவன்போல் அதைச் சன்னல் வழியே ரோஸியின் கால்களைக் குறி வைத்து விசி எறிந்தான். கொஞ்சத்தில் குறி பிசகிய தட்டு மேசைமேல் இருந்த கண்ணுடிப் பூந்தொட்டியைத் தாக்கிச் சுக்கல் நூருக உடைத்து நொறுக்கி விட்டது.

திடீரென்று நிகழ்ந்த இந்தத் தாக்குதலைக் கண்டு பயந்து நடுங்கிவிட்ட ரோஸி 'ஹோ'வென அலறிக்கொண்டே துள்ளியெழுந்து, ''மம்மி, மம்மி! அந்தச் சோக்ரா பாய்க்கு மைண்ட் சேஞ் சாயிடுச்சு!...கலாட்டா பண்ணுறன்!... ரேடியோவை உடைக்கிருன்!... பட்லரைக் கூப்பிட்டு அவனைப் பிடிக்கச் சொல்லு!... போலீஸைக் 'கால்' பண்ணச் சொல்லு!'' என்று குழறிய படியே கூவினள்.

இப்போதுதான் சுய நினைவு வரப் பெற்றவன் போல் அரக்கப் பரக்கச் சுற்றுமுற்றும் பார்த்த சபேசன் சரேலெனப் பாய்ந்து தெருவை நோக்கித் தலை தெறிக்க ஓடலானன். **(தொடரும்)**


LIFEBUOY
for health

# விட்ட மேஜை

★ யாரிடம் முறையிடுவது!
★ ராஜாஜியிடம் கற்றேன்!
★ நல் விருந்து

ராமபிரான் கானகத்தில் இருக்கும்போது ஒரு நாள் அவர் தாங்கி நிற்கும் கோதண்டத்தின் அடியில் ஒரு தவளை சிக்கிக்கொண்டதாம். அப்போது அது, ''யாராவது அபராதம் செய்தால் ஸ்ரீ ராமபிரானிடம் முறையிடலாம்; ராமபிரானே! நீரே என்னைத் துன்புறுத்தினால் நான் யாரிடம் முறையிடுவேன்?'' என்று கதறியதாம். அதைப் போல அரசாங்கமே மக்களை வருத்தினால் யாரிடம் முறையிடுவது?

பஸ்களில் இத்தனை சீட்டுகளுக்கு மேல் ஏற்றக் கூடாது எனக் கட்டுப்பாடு இருக்கிறது. சினிமாக் கொட்டகையில் அதிகப்படி டிக்கட் கொடுக்கக் கூடாது என்று விதி இருக்கிறது. ரயிலில் மட்டும் கேள்வி முறையே இல்லாமல் புளி மூட்டை அடைப்பது போலத் திணிக்கிறார்கள்; மக்கள் நின்றபடித் திணறித் தொங்கிக்கொண்டு பிரயாணம் செய்வதோடு லைனுக்கு நெருக்கமாக உள்ள கம்பங்களில் மோதி மண்டையை உடைத்துக் கொண்டு விபத்துக்களுக்கு ஆளாகிறார்கள்; குழந்தை குட்டிகளோடு வருகிறவர்களும், கர்ப்பிணிகளும் படுகிற கஷ்டங்கள் சொல்லத் தரமன்று. வலிமை உள்ளவர்கள் ஜன்னல் வழியாகத் தாவி சர்க்கஸ் பல செய்து, வானரமாக மாறி, ''சாமான்களுக்கு மாத்திரம்'' உள்ள இடத்தில் பலத்த குறட்டை விட்டுக் கொண்டு உறங்குகிறார்கள்; நேர்மை, மனச்சாட்சி உள்ளவர்கள் நின்றுகொண்டே பிரயாணம் செய்கிறார்கள். அவசரத் தேவைகளை கூடக் கழிக்க வழியில்லாமல், உடல் உபாதையோடு பிரயாணம் செய்து, ஒரு நாள் பிரயாணத்தால் மூன்று நாள் ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டிய சிரமம் ஏற்படுகிறது.

ஒவ்வொரு பட்ஜெட்டின்போதும் டிக்கட் கட்டணம் ஏறியிருக்கிறதே தவிர, அந்த அளவுக்கு வசதிகள் அதிகரித்திருக்கின்றனவா என்றால் கிடையாது.

திருவிடைமருதூர்,
2–6–65 **கே. ரகுபதி**

●

நாற்பத்திரண்டு வருஷங்களுக்கு முன்னால் 1922ல் நடந்தது. சித்தரஞ்சன தாஸ் காங்கிரஸின் மூவ்வகை (சட்ட சபை – கோர்டு – பள்ளிக்கூடம்) பகிஷ்காரத்தை விடவேண்டும் என்று வலியுறுத்தினர். அவ்வருஷம் கயாவில் நடந்த காங்கிரஸ் வருஷாந்திரக் கூட்டத்திற்கு அவர்தான் அக்கிராசனர். அவரும் மோதிலால் நேருவும் உரிய காரணங்களைத் தெளிவாக விளக்கினார்கள். நான் கவனமாகக் கேட்டேன். அவர்கள் கூறிய காரணங்கள் யாவும் சரி என்ற முடிவுக்கு வந்துவிட்டேன். பிறகு ராஜாஜியைச் சந்தித்து என் முடிவைத் தெரிவித்தேன். அதற்கு ராஜாஜி ''மாலையில் தமிழ் நாட்டிலிருந்து வந்திருக்கும் பிரதிநிதிகளுக்கு மூவ்வகை பகிஷ்காரங்களை ஏன் இந்த காங்கிரஸில் ஊர்ஜிதம் செய்ய வேண்டும் என்பதற்குள்ள காரணங்களை எடுத்துச் சொல்லப் போகிறேன். நான் கூறுவதையும் கேட்ட பிறகு நீ புத்திபூர்வமான முடிவுக்கு வரலாம்'' என்றார்.

கயாவில் காங்கிரஸ் கூட்டம் கூடுவதற்குச் சில மாதங்கள் முன்பிருந்தே நான் தமிழ் நாட்டில் ராஜாஜியின் (மாறுதல் வேண்டாம்) கருத்தைப் பலமாக எதிர்த்துப் பிரசாரம் செய்து வந்தேன். ஏ. ரங்கசாமி அய்யங்காரும் எஸ். சத்தியமூர்த்தி அய்யர் அவர்களும் எனக்குத் தலைவர்களாக விளங்கினார்கள். நான் அல்ப தொண்டன். இருப்பினும் ராஜாஜி என் போக்கைப் பொருட்படுத்தாமல், ''நான் சொல்லப் போவதையும் கேட்ட பிறகு புத்திபூர்வமான ஒரு முடிவுக்கு நீ வருவதில் ஆட்சேபணை இல்லை' என்றார். அவருடைய போதனையில் அடங்கியிருந்த புத்திமதி எட்டு வருஷங்களுக்குப் பிறகு பயனளித்தது. வேதாரண்யத்தில் நடந்த உப்பு சத்தியாக்கிரஹப் போராட்டத்தில் கலந்து கொள்ளவும், அதன் பிறகு பன்னிரண்டு வருடங்கள் கழித்து நடந்த 1942 இயக்கத்தில் சேராமல் இருக்கவும் செய்தது. ஆனால் போலீஸார் என்னைப் பழைய காங்கிரஸ்காரன் என்று 1942லும் காவல் கைதியாக்கினார்கள்.

பொய்யை மெய்யாக்க விரும்புவோன் (கோயபல்ஸ்) பொய்யைத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருக்க வேண்டும். மெய்யைக் கண்டறிய விரும்புவோர் எதிர்க் கட்சி வாதத்துக்கு மதிப்பு அளித்துச் செவி சாய்க்க வேண்டும் என்ற பாடத்தை நான் ராஜாஜியிடம்தான் கற்றேன்.

வேலூர்,
**வி. வி. ராஜகோபாலாச்சாரி**

●

'கல்கி' 6–6–1965 இதழில் வெளியாகியிருந்த 'சாகஸ நிருபர்கள் சிலர்!' என்ற கட்டுரையைப் படித்த பின்புதான், பத்திரிகை நிருபர்களில் சிலர் தங்கள் கூர்ந்த மதியினால் எத்தகைய சாகஸங்களைப் புரிந்திருக்கிறார்கள் என்பது தெரிய வந்தது. உலக நடவடிக்கைகளை மக்களுக்கு உணர்த்துவதில் 'கல்கி' எவ்வளவு அதிக அக்கறை கொண்டுள்ளது என்பதை இக்கட்டுரையைப் படிப்பதன் மூலம் தெரிந்துகொள்ளலாம். 'கல்கி'க்கு எனது மனமார்ந்த நன்றிகள் உரித்தாகுக.

இதே இதழில் பிரசுரமாகியிருந்த ஏ. எஸ். ராகவன் அவர்களுடைய 'சூறாவளி' (அட்டைப் படக் கதை) என்ற சிறுகதை சிறந்ததோர் உண்மையை உணர்த்துகிறது. ஓவியர் கல்பனு தீட்டியுள்ள அட்டைப் படம் கண்களுக்கோர் அருமையான விருந்து.

பெங்களூர்,
4–6–65 **த. கணேசன்**



# மாப்பிள்ளை முறுக்கு

## துமிலன்

கியூ வரிசைக் கதைகள்

"நல்ல வேளை, பஸ்கள் நம்மை ஏமாற்றமடையச் செய்யவில்லை. வழக்கம் போல், ஜனங்கள் நிறைந்து வழிந்து கொண்டிருக்கிறார்கள். நேற்றுப்போல் காலியாக வரவில்லை" என்று மாதங்கி வசந்தனிடம் கூறினாள். அவர்களிருவரும் ஒரு பஸ் ஸ்டாப்பில் நின்று கொண்டிருந்தனர்.

"நான் அவை பாதி காலியாக வந்த அதிசயத்தைப் பற்றி விசாரித்தேன். நேற்று மட்டும் புதிதாகத் தயாரான பஸ்களை ஓட்டிப் பார்த்தார்களாம். அவற்றில் மூன்று லாரிகளுடன் மோதிக் கொண்டதில் பழுதடைந்து விட்டனவாம். ஐந்தாறு ஏற்கனவே பழுதடைந்த தற்குப் 'பதிலி'களாம். பாக்கி பஸ்களை வேறொரு ராஜ்யத்துக்கு விற்கப் போகிறார்களாம்" என்றான் வசந்தன்.

"எப்படியோ கியூ வரிசைக்கு ஆபத்தில்லை. வருஷக் கணக்கில் கியூவில் நிற்கச் செய்து, அந்த வரிசை இன்பத்தை அநுபவிக்கச் செய்து வந்திருக்கிறார்களா? அந்தப் பழக்கத்தைத் திடுதிப்பென்று நிறுத்தினால் ஹிருதயமும் திடீரென்று நின்று விடாதா?"

"ஆகையால் 'கியூ வரிசை வாழ்க!' என்று சொல்வோமா?" என்று வசந்தன் சிரித்துக்கொண்டே கேட்டான்.

"கியூ வரிசை வாழ்க!" என்று மாதங்கி மெதுவாகக் கோஷமிட்டாள். பிறகு ஏதோ ஞாபகம் வந்தவள் போல, "அந்த முறுக்கான மாப்பிள்ளை கியூ வரிசையில் நிற்க வேண்டி வந்தால் என்ன செய்வான்?" என்று மாதங்கி கேட்டாள்.

"அவன் மாட்டில் உயரப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டியது தான். பஸ்கள் வந்து போய்க் கொண்டிருக்கும். ஆனால், அந்தப் பையன் முறுக்கெல்லாம் மாமனார் வீட்டோடுதான். வெளியே காண்பிப்பதில்லை. அந்த மாப்பிள்ளை முத்து நல்ல பையன்தான். ஆனால் மாப்பிள்ளை என்றால் முறுக்குடன் இருக்க வேண்டுமாக்கும் என்று நினைத்துக் கொண்டிருந்தான்."

"அவனது இந்த முறுக்கு உணர்ச்சியை ஞாபகப்படுத்துவதற்காகத்தான் கல்யாணங்களின்போது ஐம்பது, நூறு என்று பெரிய முறுக்குகளாக வைக்கிறார்களாக்கும்!"

"நீங்கள் சொல்வதிலிருந்து அப்படித்தானிருக்க வேண்டுமென்று நினைக்கிறேன்!"

"அந்த முத்துவை ஆஸ்பத்திரிக்குத் தூக்கிக்கொண்டு போனார்களாக்கும்!" என்று மாதங்கி விசாரித்தாள்.

"இல்லை. அவன் விறைப்பாக நடந்து வந்தபோது வாசற்படி தலையில் பலமாக இடித்தது வாஸ்தவம்தான். ஆனால் அங்கே உயர ஒரு தலையணை வைத்துக் கட்டப்பட்டிருந்தது!" என்று வசந்தன் கூறினான்.

"வாசற்படியில் தலையணையா?" என்று மாதங்கி கேட்டாள்.

"ஆமாம். மேலே சட்டம் உடைந்திருந்தது. அதை ரிப்பேர் செய்யும் வரையில் தலையில் இடிக்காதிருப்பதற்காக, மாமனார் மாதவன் முன்ஜாக்கிரதையாகத் தலையணையைக் கட்டி வைத்திருந்தார்" என்று வசந்தன் கூறிவிட்டு மேலே கதையைச் சொல்லலானான்:

"முத்துவுக்குத் தலையில் அடிபடவே இல்லை. ஆனால் அவனுக்கு அவமானமாயிருந்தது. அதனால் வலிப்பதுபோல் பாவனை செய்து கோபமாக இருந்தான். மாதவன் அவன் தலையைப் பலமாகப் பிடித்துவிட்டார்; மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். டெலிபோனிடம் சென்று ஸர்ஜன் சங்கரனுக்கு

டெலிபோன் செய்யப் போனார். முத்து எந்த டாக்டரையும் கூப்பிட வேண்டியதில்லை யென்றும் தன் அம்மா ஒத்தடம் கொடுத்துச் சிகிச்சை செய்வாளென்றும் சொல்லி விட்டான். மாதவன் உடனேயே வாசற்படியைச் செப்பனிட ஏற்பாடு செய்து விட்டார்.

மாப்பிள்ளைக்கு நாளொரு வண்ணமாக மூறுக்கு ஏறிக் கொண்டே போயிற்று. அவன் மேல் தப்பில்லை. அப்படியில்லாவிட்டால் தன் தாயார் முதலியவர்கள் பையனைப் பெண் வீட்டார் கையில் போட்டுக் கொண்டு விட்டார்கள் என்று சொல்வார்களோ என்ற பயம். மாமனார் மாதவன் அவனைவிட முறுக்குள்ளவர்; பிடிவாதக்காரர்; முரடர். ஆனால் ஒரு பெண்ணைப் பெற்று, அவளுக்குக் கல்யாணஞ் செய்து கொடுத்து விட்ட மகா பாபத்துக்காக, அவனுக்குக் கூடிய வரை பணிந்து போய்க் கொண்டிருந்தார்.

என்ற விளம்பரம் கண்ணில் பட்டது: மாதவன் மறு நாள் காலை பணத்தை எடுத்துக் கொண்டு காலை ஏழு மணிக்கே அந்த விலாசத்துக்குப் போனார். நல்ல வேளையாக அவர் சீக்கிரம் போனார். ஏனென்றால் அவர் போன சில நிமிஷங்களுக்கெல்லாம் வண்டி வாங்குவதற்காக ஒரு பெரிய கூட்டம் வந்து விட்டது. பலர் தங்கள் கையில் செக்குகளையும், பாங்கு டிராப்ட்களையும் தயாராய் வைத்துக் கொண்டு அதை நீட்டிக் காண்பித்துக் கொண்டே வந்தனர்.

மாதவன் ரொக்கமாகப் பணத்தை எண்ணிக் கொடுத்து வண்டியை எடுத்தார். அது பார்ப்பதற்கு ஜம்மென்று இருந்தது. மேலே புதிதாக வர்ணமடிக்கப்பட்டிருந்தது. உள்ளே ஆசனங்கள் புத்தம் புதிதாக இருந்தன. 'ஃபோர்டி'ல் எல்லாம் பளபள வென்று இருந்தன. மாதவனுக்கு வண்டிகளைப்



நாலு வருஷங்களுக்கு முன்னால் அவர் தம் பெண்ணின் ஜாதகத்தை எடுத்து முதல் வரன் பார்க்க ஆரம்பிக்கும் போதே மோட்டார் வண்டிகள் தயாரிக்கும் புஷ்பரத மோட்டார் கம்பெனியில் தமது பெயரைப் பதிவு செய்து கொண்டு அதற்காக முன்பணமும் கட்டியிருந்தார். ஆனால் இன்னும் வண்டி கிடைக்க வில்லை. அந்த வண்டிகளுக்காக ஒரு கியூ வரிசை காத்துக் கொண்டிருந்தது. இந்தக் கியூ வரிசையின் விசேஷம் என்னவென்றால் அவர்கள் புதிய மோட்டார் வண்டி கொடுக்கப்படும் என்று கம்பெனியில் அறிவிக்கப்படும் வரை அவரவர்கள் வீட்டிலேயே இருந்து கொண்டிருக்கலாம்.

ஒரு நாள் பத்திரிகையில் 'மோட்டார் வண்டிகள்' என்ற தலைப்பிலுள்ள விளம்பரங்களைப் பார்வையிட்டு வந்த போது, ''வாக்ஸ்ஹால் 1937ம் வருஷத்து மாடல். ஓடும் நிலைமையில் இருக்கிறது. நாலாயிரத்து ஐந்நூறு ரூபாய்க்கு முதல் செக் கொடுப்பவர் வண்டியை ஓட்டிக் கொண்டு போகலாம். காலை எட்டு முதல் பத்து மணி வரை.....''

பற்றி ஓரளவு தெரியும். ஓட்டவும் ஓட்டுவார். வண்டியைத் தாமே ஓட்டிக் கொண்டு கிளம்பினார். சுமார் அரை மைல் தூரம் சென்றதும் அது திடீரென்று நின்று விட்டது. அதைக் கண்ட போது அவர் உதடுகளில் புன்னகை அரும்பிற்று. என் கடன் மோட்டார் தள்ளிக் கிடப்பதே என்றுள்ள சில பாட்டைசாரிகள் வண்டியைத் தள்ளினார்கள். வண்டி அதிக மக்கர் செய்யாமல் கிளம்பிற்று. மாதவன் நேரே தம் சம்பந்தி சங்கரி அம்மாள் வீட்டுக்குச் சென்றார். அந்த அம்மாளையும், மாப்பிள்ளையையும் ஏற்றிக் கொண்டு கோவிலுக்குப் போய் சுவாமி தரிசனம் செய்து வைத்து விட்டு மறுபடியும் வீட்டில் கொண்டு போய் விட்டார்.

இதற்குப் பிறகு அடிக்கடி அவர் அவசியமான போதெல்லாம், சந்தர்ப்பம் நேரும் போதெல்லாம் அவர்களை வண்டியில் ஏற்றிக் கொண்டு போவது வழக்கம்.

வண்டி வந்து பத்து தினங்களுக்கு மேலாகி விட்டது. ஒரு நாள் மாதவன் தம் மனைவி, பெண், மாப்பிள்ளை, சம்பந்தி அம்

மான் ஆகியவர்களுடன் தமது வண்டியிலே மகாபலிபுரத்துக்கு உல்லாசப் பிரயாணம் சென்றார். அங்கே சங்கரி நிதானமாக எல்லாவற்றையும் பார்த்து விட்டுக் கிளம்புவதற்குள் இருட்டிவிட்டது. வண்டி கிளம்பிப் பாதி வழி வந்திருக்கும். திடீரென்று நின்று விட்டது. மாதவன் கீழிறங்கி எஞ்சின் மூடியைத் திறந்து பார்த்தார்; பிறகு, 'டிக்கி'யைத் திறந்து பார்த்தார். ஒன்றுக்கும் வண்டி அசைந்து கொடுக்க வில்லை. அந்த இடம் ஒரு சவுக்குத் தோப்பாக இருந்தது. கண்ணில் யாரும் படவில்லை. 'ஒருவரையும் காணோமே! தள்ளணுமே, என்ன செய்கிறது?' என்று முனகிக் கொண்டிருந்தார். அது சங்கரியின் காதில் விழவே, ''ஏண்டா, முத்து! நீ கொஞ்சம் தள்ளேண்டா!'' என்றாள். மாப்பிள்ளை முணகிக் கொண்டே இறங்கித் தள்ளலானான். அவன் நல்ல பலசாலி. கிட்டத்தட்ட கால்பர்லாங் தூரம் தள்ளிச் சென்றதும் வண்டி கிளம்பியது. பிறகு மாப்பிள்ளை வண்டியில் ஏறிக் கொண்ட போது மாதவன் அவனுக்குச்சிரமம் கொடுத்ததற்காகத் தமது வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்டார். வண்டி பிறகு தகராறு செய்யாமல் சென்னை வந்து சேர்ந்தது.

அடுத்த நாள் காலை அவர் புஷ்பரதம் கம்பெனியை டெலிபோனில் கூப்பிட்டு, ''வண்டிக்கு ரிஜிஸ்தர் செய்து நாலு வருஷமாயிற்று. பேச்சு மூச்சு இல்லையே!'' என்று கோபித்தார்.

''என்ன ஸார், செய்கிறது? ஒரு முக்கியமான பகுதி ஐஸ்லாந்திலிருந்து வரவேண்டும்! அதற்காகக் காத்துக் கொண்டிருக்கிறோம்!'' என்று பதில் வந்தது. இந்தத் தகவலை, பக்கத்திலிருந்த தம் மாப்பிள்ளையிடம் தெரிவித்தார். பிறகு, ''நான் ஒரு நல்ல டிரைவராகப் பார்த்துப் போட்டு விடுகிறேன்'' என்றார்.

''என்னத்துக்கு மாமா! வேண்டியதில்லை!'' என்றான் முத்து. அவன் மாப்பிள்ளை முறுக்கு சிறிது குறைந்திருந்தது.

''ஒரு வேளை எனக்கே வண்டி சரியாக ஓட்டத் தெரியவில்லையோ, என்னமோ? பழனி ரொம்ப நன்றாக ஓட்டுவான். அவனை ஏற்பாடு செய்கிறேன். நீங்கள் என் சௌகரியத்துக்காகக் காத்துக் கொண்டிராமல் வண்டியை எப்போது வேண்டுமானாலும் எடுத்துக் கொண்டு போகலாம்'' என்றார் மாமனார்.

பிறகு பழனியைத் தருவித்து அவனை டிரைவராக அமர்த்தினார்.

பழனி வந்து ஒரு வாரம் வரை வண்டி நல்லதனமாக நடந்து கொண்டு வந்தது. ஒரு நாள் முத்து மட்டும் வண்டியில் சென்று கொண்டிருந்தான். வண்டி. லெண்டிரல் எதிரே போய்க் கொண்டிருந்தது. அப்போது ஜனங்கள் வீதியைக் கடக்கச் செய்வதற்காக கான்ஸ்டபிள் விசிலை ஊதித் தமது கையையும் காண்பித்தார். ஆனால் முத்துவின் வண்டி நிற்கவேண்டிய எல்லையைத் தாண்டிப் பாதையின் நட்ட நடுவில் வந்து நின்றது; ஒரேயடியாகவும் நின்று விட்டது. கான்ஸ்டபிள் அதைத் தள்ளப் பார்த்தும் அது அசையவில்லை. பிறகு முத்துவும் இறங்கித் தள்ளினான். வண்டி அவன் கை ஸ்பரிசத்துக்காகக் காத்துக் கொண்டிருந்தது போல் நகர்ந்தது. கான்ஸ்டபிள் அதை ஓர் ஓரமாக நிற்கச் செய்தார். பிறகு பாட்டைசாரிகளைப் போகச் சொல்லி விட்டுத் திரும்பி வந்து வண்டிக்காரரையும் டிரைவரையும் பற்றிய தகவல்களைத் தமது கேஸ் டயரியில் குறித்துக்கொண்டு போகச் சொல்லி விட்டார். ஆனால் வண்டி மறுபடியும் மக்கர் செய்தது. மறுபடியும் முத்து கீழிறங்கி அதை மிகவும் கோபமாகத் தள்ளவே அது திடீரென்று கிளம்பிற்று.

மறு நாட் காலை, மாதவன் புஷ்பரதம் கம்பெனிக்கு டெலிபோன் செய்தார். ''எங்கள் மோட்டார் கம்பெனியில் வேலை நிறுத்தம் நடந்து கொண்டிருக்கிறது. ஊழியர்களுக்குப் பதினொரு மாதம் போனஸ் வேண்டுமாம். கம்பெனிக்குள்ளேயே சீட்டாடிக் கொண்டிருக்கிறார்கள்'' என்றார்கள்.

மாதவன் இந்தத் தகவலைத் தமது மாப்பிள்ளையிடம் தெரிவித்தார்.

இதற்குப் பிறகு ஒரு நாள் முத்துவும், அவன் தாயாரும் மயிலாப்பூர் கோயிலுக்குப் போய் விட்டுத் திரும்பிய போது வண்டி லஸ் நாற்சந்தியில் நின்று விட்டது. அப்போது முத்துவேயன்றி அவனைப் பெற்றெடுத்த தாயாரும் அதைத் தள்ளும்படியாகி விட்டது.

வண்டி சரியாய் ஓடாத போதெல்லாம் மாதவனுக்குப் பிரமாத கோபம் வந்து விடும். உடனே புஷ்பரதம் கம்பெனி டெலிபோன் அலறும். இந்த முறை ''தேசத்தில் நெருக்கடியான அவசர நிலைமை ஏற்பட்டிருப்பதால் பொதுமக்களுக்கு வண்டி கொடுப்பதைத் தாற்காலிகமாக நிறுத்தி வைக்கும்படி சர்க்கார் உத்தரவிட்டிருக்கிறார்கள்'' என்று தெரிந்தது.

''ஏன் மாப்பிள்ளை! இந்த வண்டியைத் தொலைத்துத் தலை முழுகி விடட்டுமா?'' என்று மாதவன் ஆத்திரத்துடன் கேட்டார்.

''வேண்டாம், இன்னும் கொஞ்ச நாள் இதை வைத்துக் கொண்டே காலத்தைக் கழிக்கலாம்'' என்றான் முத்து. அவன் மாப்பிள்ளை முறுக்கு இப்பொழுது எத்தனையோ குறைந்து விட்டிருந்தது.

சில வாரங்களுக்குப் பிறகு ஒரு நாள் அவன் ஒரு சினிமாப் படம் பார்க்க இரவுக் காட்சிக்குச் சென்றிருந்தான். திரும்பி வீட்டுக்கு வரும் வழியில் வண்டி திடீரென்று நின்று விட்டது. இரவு ஒன்றரை மணி. தெருவில் ஈ காக்கை கிடையாது. முத்து தெய்வமே என்று வண்டியை அரை பர்லாங்கு தூரம் தள்ளிக் கொண்டு வந்தான். வண்டி தள்ளும் போது மாப்பிள்ளை மாதிரி முறைத்துக் கொண்டு தலை நிமிர்ந்து நிற்க முடியுமா? உடலை வளைத்துக் காலைப் பலமாக கீழே ஊன்றித் தலையை ஓரளவு குனிந்துதானே தள்ளியாக வேண்டும்? முத்து அப்படியே செய்தான். அவனுக்கு இப்போது வண்டி தள்ளுவது மிகவும் பழக்கமாகிவிட்டது.

அடுத்த நாள் மாதவன் பல்லைக் கடித்த வண்ணம் டெலிபோன் பக்கத்தில் உட்கார்ந்திருந்தார். புஷ்பரதம் கம்பெனியாரைக்

கூப்பிட்டு, ''புது வண்டி எப்போது வரும்?'' என்று கேட்டார்.

''மோட்டார் காரின் எஞ்சினுக்கு வேண்டிய ஒரு பகுதி போபிலியாவிலிருந்து வர வேண்டியிருக்கிறது. அதற்கு அன்னிய நாணயச் செலாவணி வசதி கிடைக்கவில்லை. நாங்கள் என்ன செய்யட்டும்?'' என்று பதில் வந்தது.

''என்ன மாப்பிள்ளை, இந்த வண்டிக்கு நல்ல கிராக்கி இருக்கிறது. கொடுத்து விடட்டுமா? அடிக்கடி நீங்கள் தள்ள வேண்டி வருவதை நினைத்தால் எனக்குக் கஷ்டமாயிருக்கிறது'' என்றார் மாதவன்.

''அதற்கென்ன? தள்ளுவது என்ன பெரிய காரியமா? வண்டி வைத்திருக்கும் பெரிய மனிதர்கள் எத்தனையோ பேர் தள்ளிக் கொண்டுதானே இருக்கிறார்கள்?'' என்று பணிவுடன் கூறினான். அவனிடம் அந்த முறுக்கென்பதே இப்போது இல்லை.

மாதவன் திடீரென்று ஞாபகம் வந்தது போல் டெலிபோனை எடுத்து ஓர் எண்ணைக் கூப்பிட்டார்.

''யாரு, அண்ணாமலையா? நீ வண்டி வாங்கி இன்றோடு ஒரு வருஷம் முந்நூற்றைம்பத்தைந்து நாளாகிறது. நாளையோடு இரண்டு வருஷம் முடியப் போகிறது. நீ சட்டப்படி அதை விற்று விடலாமே. நான் நீங்கள் வாங்கின விலைக்குக் கொஞ்சம் கூடவே போட்டுக் கொடுக்கிறேன்'' என்றார்.

''சரி!'' என்று பதில் வந்தது.

''மாப்பிள்ளை! கிட்டத்தட்ட புது வண்டியே வரப் போகிறது!'' என்று மாதவன் சந்தோஷத்துடன் முத்துவிடம் தெரிவித்தார். பிறகு, ''அப்படி அதுவும் தள்ளும்படியாய் நேர்ந்தால், தள்ளுவதற்கென்றே ஒரு பலசாலியையும் வேலைக்கு அமர்த்திவிடலாம்'' என்று சிரித்துக் கொண்டே கூறினார்.

பிறகு அவர் தம் பெண்ணிடம் விஷயத்தைத் தெரிவித்த போது அவள் சந்தோஷப்பட்டாள். ''ஆனால் அப்பா, ஒன்று! பழனி வேலைக்கு வந்த போது அவனுக்குப் புத்திமதி சொன்னீர்களே, ஞாபகமிருக்கிறதா? வண்டியில் ஒரொரு சமயம் பெட்ரோல் இல்லாமலிருக்கும்படி செய். பாட்டரியை 'வீக்'காக வைத்துக் கொள். வண்டியை நிறுத்திவிட்டு ஸ்விட்சைப் போடாதே. இது மாதிரி மாப்பிள்ளை கீழே இறங்கி வண்டியைத் தள்ளும்படி செய்வதற்கான காரியங்களைச் செய்து வா என்று சொல்லியதைக் கேட்டுக் கொண்டிருந்தேன்'' என்றாள்.

''இனி மேல் அப்படிச் செய்ய மாட்டேன். மாப்பிள்ளை இப்போது மாப்பிள்ளை இல்லை. வண்டி தள்ளித் தள்ளி அவருக்குப் பல்லயம் வந்து விட்டது'' என்று மாதவன் சொன்னார்.

வசந்தன் கதையை முடித்து விட்டு இரண்டு நிமிஷம் ஓய்வு எடுத்துக் கொண்டு மௌனமாயிருந்தான். அப்போது அவர்கள் நின்றிருந்த பக்கமாக ஒரு சிறுமி தன் பள்ளிக்கூட உடையுடன் வந்தாள். அவள் தன் கையில் வைத்திருந்த பென்ஸிலால் வசந்தன் மாதங்கி இரண்டு பேர் மீதும் தட்டிக் கொண்டே போனாள்.

''இந்தக் காலத்துக் குழந்தைகளே யமன்.''

''ஆமாம்!'' என்று வசந்தன் தலையை அசைத்தான்.

''மாலினி என்ற பெண் என்ன செய்தாள் தெரியுமா?'' என்று மாதங்கி ஆரம்பித்தாள்.

''ஒரே ஒரு ராஜ்யத்தில் ஒரே ஒரு மந்திரியிருந்தார். அவர் கைத் தொழில் விவசாயம், உணவு, கல்வி முதலிய பல இலாக்காக்களைக் கவனித்து வந்தார். அவருக்கு மாலினி என்று ஒரு பெண். வயது ஆறு இருக்கும். ஒரு நாள் பள்ளிக்கூடம் போய் விட்டுத் திரும்பி வண்டியில் வந்தாள். பிறகு டிபன் கொடுக்க அவளைத் தேடிய போது அவளைக் காணோம்.

ஸோபாக்களுக்கு அடியில் தேடினார்கள். கட்டில்களுக்கு அடியில், மெத்தைகளுக்கிடுக்கில், பீரோக்களுக்குப் பின்னால் தேடிப் பார்த்தார்கள். ரெப்ரிஜிரேட்டருக்குள்கூடத் தேடிப் பார்த்தார்கள். கடைசியில் அவளை ஒரு சிறிய அறையில் கண்டு பிடித்தார்கள். அது மிகச் சிறிய அறை. அந்த அறைக் கதவு சாத்தித் தாழ்ப்பாளிடப் பட்டிருந்தது. அதைத் திறந்து கொண்டு வெளியே வரச் சொன்னார்கள். ''திறக்கத் தெரியாது; திறக்க மாட்டேன்'' என்று மாலினி கூறிக்கொண்டே இருந்தாள். அவள் தாயார் எத்தனையோ சொல்லிப் பார்த்தும் அவள் கேட்கவில்லை.''

மாதங்கி இப்படிச் சொல்லிக் கொண்டிருந்த சமயம் அவள் செல்ல வேண்டிய பஸ் கால் பங்கு காலியாக வரவே அதில் ஏறிச் சென்று விட்டாள்.

அடுத்த இதழில் —

## கல்லூரி திறந்தது!

— ராஜேந்திரகுமார் —

# B·I



# S. S. ரஜுலா

சென்னையிலிருந்து

1965 ஜுலை 9 — 1965 ஆகஸ்டு 7

சென்னையிலிருந்து பினங்கு மற்றும் சிங்கப்பூருக்கு பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசதாரருக்கு விண்ணப்பிக்கவும்.

**மெஸர்ஸ் பின்னி & கோ., லிமிடெட்**
7, அரமனைக்காரத் தெரு, சென்னை 1
அல்லது கீழ்க்கண்ட கம்பெனியின் அங்கீகாரம்
பெற்ற பாஸேஜ் புரோக்கர்களுக்கு விண்ணப்பிக்கவும்

**C. M. குட்டி.**
புரொப்ரைட்டர்: குட்டி டிராவல் சர்வீஸ்
38, அங்கப்ப நாயக்கன் தெரு
சென்னை - 1

**மெஸர்ஸ் கேரளா டிராவல்ஸ்**
மாஸ்காட் ஹோட்டல்
திருவனந்தபுரம்

நாகப்பட்டினத்திலிருந்து

1965 ஜுலை 10 — 1965 ஆகஸ்டு 8

நாகப்பட்டினத்திலிருந்து பினங்கு மற்றும் சிங்கப்பூருக்குப் பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தங்களது பிரயாண டிக்கட்டுகளை கீழ்க்கண்ட விலாசத்தில் நேரிடையாகப் பெற்றுக் கொள்ளலாம்

**மெஸர்ஸ். மதுரா கம்பெனி பிரைவேட் லிமிடெட்**
முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம்

பினங்கு, போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும், சிங்கப்பூரில் கப்பல் மாற்றி ஆஸ்திரேலியா நியூஜிலாந்து துறைமுகங்களுக்கு அனுப்பவும் சரக்குகள் சென்னையிலிருந்தும் நாகப்பட்டினத்திலிருந்தும் ஏற்றுக் கொள்ளப்படும்.

பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றும் விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும்:

**பின்னி & கம்பெனி லிமிடெட்**
7, அரமனைக்காரத் தெரு, சென்னை -1

**மதுரா கம்பெனி பிரைவேட் லிட்.**
முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம்

**ஏஜெண்டுகள்: பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி லிமிடெட்**

| | |
|---|---|
| அருணாசலம் | சேகர்—மாப்பிள்ளை |
| சீதா—மனைவி | பாக்கியம்—தாயார் |
| கிட்டு—மகன் | கமலி—மகள் |

மற்றும்

அடுத்த வீட்டு நாயுடு, நண்பர் சோமு, நாணுப் பாட்டி

சீதா: என்ன....

அருணாசலம்: சரிதான், 'என்ன' போட்டுண்டு வந்துட்டியா நீ?

சீதா: பின்னே இந்தக் காலத்துப் பெண்களைப் போலப் பேரைச் சொல்லிக் கூப்பிடச் சொல்றேளா ?

அருணா: பேரைச் சொல்லுவோ, ஊரைச் சொல்லுவோ, உன்னைப் போல இல்லே, தொந்தரவு கொடுத்திண்டு. இந்தக் காலத்துப் பெண்கள் சம்பாதிச்சுக் குடும்பத்துக்கும் போடறா...

சீதா: அதுக்கென்ன, நான் மட்டும் போட மாட்டேனா, சம்பாதிக்கப் போக மாட்டேனா ? இந்த ஒன்பது கஜப்

# காசி யாத்திரை

எஸ். ரங்கநாயகி





புடவைக்குப் பதிலா ஒரு ஆறு கஜ நைலானைச் சுத்திக்கிறேன், 'டை'ன்னு ஆபீஸ் நாற்காலியிலே உக்காந்துக்கிறேன். வீட்டுச் சமையலுக்கு முப்பது ரூபாய்க்கு ஆள் போடுங்க. குழந்தையைப் பார்த்துக்க இருபத்தைஞ்சுக்கு ஆயா போடுங்க; ஸ்டோரிலேயும் கடையிலேயும் கியூவிலே நின்னு சாமான் வாங்க இருபதுக்கு ஆள் வச்சுடுங்க. போதும் : துணியெல்லாம் தோச்சுக் காய வைக்க எடுத்து வைக்கப் பதினைஞ்சுக்கு ஒரு பையன்...

அரு: ஏய், ஏய், அது போதும், அதோடு நிறுத்து. தேர்தலுக்கு நிக்கறவா மாதிரி...

சீதா: பின்னே நீங்க தானே என்னவெல்



ஸாமோ ஆரம்பிச்சேன். டி. யூ. ஸி. எஸ். ஸிலே முதல் ஞாயிற்றுக்கிழமை காப்பிக் கொட்டை வாங்கணும், போய்ட்டு வாங் கன்னு சொல்ல வந்தா...

அரு: ஏன், நீ போறதுக்கு என்னவாம்?...

சீதா: பேஷாப் போறேன். நீங்க சமையலே முடிச்சுட்டுக் குழந்தைகளுக்கு எண்ணெய் தேய்க்கக் குளிப்பாட்டிடுங்கோ... மற்ற நாள் பள்ளிக்கூடம். அதனுல் 'ஞாயிறு நீராடு'ன்னு பாடம் வச்சாச்சு. அப்புறம் வண்ணுன் இந்த எட்டு மணி வேளைக்குத்தான் வருவான். துணிகளைக் கணக்குப் பார்த்துப் போடுங்க. அதையும் கணக்குப் பார்த்துட்டு... என்ன விழிக்கிறேள். இந்த ஐயனுவரம் பால் டிப்போ நமக்கு ஒண்ணு போறுமா என்ன, அதனுல் வரதராகவிட்டே ரெண்டு ரூபா விதம் கைப் பால், கற்பகம் பால் டிப்போவிலே இரண்டே காலுக்குக் கணக்கு... இதெல்லாம் எழுதி வச்சிருக்கேன்.

அரு: நீ வாயை மூட மாட்டே....

சீதா: நான் ஏன் மூடணும்? அந்த ஸ்டோர் கியூவிலே காத்தாலே ஏழு மணியி லிருந்து பன்னிரண்டு மணி மட்டும் நின்னுட்டு வந்தேன்னு, எனக்குத் தட்டை வெச்சுச் சாப்பாடு போட்டாப் போறும்.

அரு: சே, சே! என்ன குடும்பம், என்ன சம்சாரம்டாப்பா! மனுஷனுக்கு நிம்மதியே கிடையாது...

பாக்யம்: ஏண்டாப்பா நிம்மதி கிடைக் காது? நீ வீட்டை விட்டு நகர்ந்தாத்தானே நிம்மதி கிடைக்கிற இடம் தெரியும்? நான் சொல்லி, நீ கேக்கிற பழக்கமேதான் போயி டுத்தே...

அரு (எரிச்சலுடன்): நீ என்ன சொல்லி நான் கேக்கலேம்மா? எங்கே போகச் சொல்றே நீ இப்போ?

பாக்கி: உன்னைத் தனியா எங்கேயும் போகச் சொல்லலேடா. நானும் துணைக்கு வரேன்னுதான் சொல்றேன்.

அரு: இடத்தைச் சொல்லித் தொலேயேன்

பாக்கி: அதாண்டா 'காதலிக்கும் நேர மெப்போ'ன்னு ஒரு சினிமா ஓடறதேடா. அது நூறு மணி ஓடின விழா இன்னைக்குக் கொண்டாடறுளாம். அதுனுலே இயேட் டரிலே சினிமா நடிகையோட ஏவெல்லாம் வரப்போறதாமே, டிக்கட் கிடைக்கிறதே கஷ்டமாம், இப்பவே போனுத்தான்...

அரு: என்னது? சினிமாவா? காதலிக்க நேரமெப்போங்கற படத்துக்கு நீயா ஆசைப் படறே? ஏம்மா...

பாக்கி: இதுலே என்னடா தப்பு? அப்படி அதிசயப்பட்டுக் கேக்கறியே. இந்தக்காலத்துப் பசங்களைப்போல நாங்க காதல் பண்ணுேமா? காதல் தேடினேமா? ஏதோ இப்போ கண் ணுலேதான் பார்க்கப் போறேம்? குடும் பத்துச் சிக்கலேயெல்லாம் மறந்து நிம்மதி தேடத்தானே சினிமாப் போறேம்? தியேட்ட ரெல்லாம் அதுக்குத்தானே வச்சிருக்கு?...

(கிட்டு ஓடி வருகிறுன்.)

கிட்டு: அப்பா... அப்பா... நல்ல வேளை நீ வீட்டிலிருக்கியே...

அரு: ஏண்டா நீ எதுக்கு வரே... உனக் கென்ன வந்துடுத்து...

கிட்டு: கணக்குப்பா கணக்கு... இந்த வாத்தியார்பாட்டுக்கு ஹோம் ஒர்க் நிறையக் கொடுத்து வச்சுட்டார். நீ எல்லாத்தையும் கொஞ்சம் போட்டு வச்சுடப்பா... நான் விளையாடப் போகணும். எங்க மைதானத்தில் கோல்மால் இன்னிக்கு கிரிக்கெட் மாட்சப்பா... நாளைக்குள்ளே நீ கணக்கை முடிச்சு வச்சுட்டாப் போதும்...

அரு (கோபத்துடன்): என்னது? என்ன சொன்னே? ஸ்கூலுக்குப் போறவன் நீயா, நானுடா... இவன் விளையாடப் போறனும்! நான் கணக்குப் போட்டு வைக்கணுமாமே...

கிட்டு: இதுலே என்னப்பா தப்பு? எப்படி யும் நீ கிட்ட இருந்து சொல்லிக் கொடுக்கத் தானே போறே! அதுக்கு நீயே போட்டுடேன்!

(கமலி மாடியிலிருந்து மெல்ல இறங்கி வருகிறுள்.)

கமலி: அப்பா, உன்மாப்பிள்ளே உங்கிட்டே சொல்லச் சொல்லி நேத்திக்கே சொன்னுர். இத்தனை நேரம் இந்த நாவலேப் படிச்சதுலே சொல்ல மறந்து போச்சு.

அருணு: என்ன சொல்லி வெச்சிருக்கான் உன் அருமைக் கணவன்?

## அவர் இவராளுல் ......

கிரேனிகஸ் என்ற இடத்தில் நடைபெற்ற போரில் வெற்றி கண்ட அலெக்ஸாண்டருக்குத் தோல்வி அடைந்த டேரியஸ் என்ற அரசர் பல வெகுமதிகளைக் கொடுக்க முன்வந்தார். அலெக் ஸாண்டருக்கு ஏனே அவைகளைப் பெற்றுக் கொள்ள மனம் வரவில்லே. இதுபற்றித் தம் படைத் தலேவர்களின் ஆலோசனையைக் கேட் டார். பார்மீனியோ என்ற தலேவர், "அரசே, நான் மட்டும் அலெக்ஸாண்டராக இருந்தால், இந்த வெகுமதிகளைக் கண்டிப்பாக வாங்கிக் கொண்டே இருப்பேன்" என்று கூறினர்.

"நான் மட்டும் பார்மீனியோவாக இருந்தால் கண்டிப்பாக அவைகளை உடனே நானும் வாங் கிக்கொண்டிருப்பேன்" என்று அமைதியாகப் பதிலளித்தார் அலெக்ஸாண்டர். —ஸ்ரீதேவி

● ● ● ● ● - (பிரான்ஸிஸ் பேகன் கட்டுரையிலிருந்து) ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ●

ஐக்கிய நாடுகள் சபையில் காரியதரிசியாக இருந்த புகழ்பெற்ற டாக் ஹாமர்ஷீல்ட் முழு மனிதராக விளங்கினார். சிந்தனையாளராகவும், கவி உள்ளம் கொண்டவராகவும் திகழ்ந்தார். அவ்வப்போது தமக்குத் தோன்றும் கருத்துக்களை நாட்குறிப்பில் எழுதி வந்திருக்கிறார். அந்த நாட்குறிப்பு இப்போது "Markings" என்ற பெயரில் புத்தக வடிவாக வெளிவந்துள்ளது. அமெரிக்காவில் அப்புத்தகத்துக்குப் பெரும் வரவேற்புக் கிடைத்துள்ளது. பல மாதங்களாகத் தொடர்ந்து மிக அதிகமான விற்பனையாகும் புத்தகமாக விளங்கி வருகிறது. இந்தப் புத்தகத்தைப் படிப்பதே ஓர் அநுபவம். அக்குறிப்புகளில் சில தொடர்ந்து ஐந்து இதழ்களில் இதே இடத்தில் பிரசுரமாகும்.

— தொகுப்பு: **எஸ். டி. காசிராஜன்**



- **உள்ளுணர்வுப் பிரயாணம்தான் பிரயாணங்களிலெல்லாம் நீண்டது.**
- **இறந்த ஒரு மனிதனைப்பற்றிப் பல கதைகள் கிளம்புவது போல், வாழ்வில் பிரபலமாக முன்னணிக்கு வந்தவனைப் பற்றியும் கதைகள் கிளம்புகின்றன. ஆனால் இறந்து போன மனிதனுக்கு அக்கதைகளைப் பொய்யாக்க வேண்டுமென்ற அக்கறையோ, அல்லது தன்னைப்பற்றி அந்த விமர்சனங்கள் வரையும் சித்திரத்தை ஒப்புக்கொள்ள வேண்டுமென்ற சந்தர்ப்பமோ இல்லை. பொதுமக்கள் சொல்லும் வர்ணனைகளை வைத்து அலங்கார உருவம் வரைந்து, தனது அந்த பிம்பத்தைக் கண்டு தானே மோகிப்பவனைப் பார்த்து நான் பரிதாபப்படுகிறேன்.**
- **மலையின் உச்சியை அடைகிற வரைக்கும், மலையின் உயரத்தை அளக்காதே. உச்சியை அடைந்த பின், அது எவ்வளவு சிறியது என்பதை அறிவாய்.**

---

கமலி: என்னப்பா அப்படிக் கோவமாப் பேசறியே! ஒவ்வொருத்தரும் அவா மாப்பிள்ளைக்கு எத்தனை செய்யறா? இந்த ஊரோடு இருந்துண்டு ஒரு நாளைக்காவது உங்கிட்ட ஏதாவது கேட்டிருக்கிறாரா? நேத்து வந்தப்போ என்னை அம்மா 'ஒரு நாளைக்குத் தங்கிட்டுப் போடீ'ன்னா. நான் தங்கினதுலே இளப்பமாப் போயிட்டேனா?

அரு: ராம ராமா! நீ ஆரம்பிச்சுட்டியா? விஷயத்தைச் சொல்லித் தொலை.

கமலி: ஒண்ணும் பிரமாதமில்லேப்பா... அவரோட சிநேகிதர் சுந்தரத்துக்கு வாடகைக்கு வீடு வேணுமாம். கொத்தவால் சாவடி பக்கத்திலே அம்பாள் தெருவிலே ஒரு போர்ஷன் காலின்னு தெரிஞ்சுதாம். யாரையாவது புரோக்கரைப் புடிச்சு அந்தப் போர்ஷனை உன்னை ஏற்பாடு பண்ணச் சொல்லிச் சொல்லச் சொன்னார்.

அரு: ஏ கமலி, நம்ப இப்போ எங்கே குடியிருக்கோம்னு தெரியுமா?

கமலி: தெரியாம என்னப்பா? நாம்ப அடையாறிலே இருக்கோம். அதனாலே என்ன வந்துடுத்து... உன் மாப்பிள்ளை டில்லிக்கோ கல்கத்தாவுக்கோ போய் ஏற்பாடு பண்ணச் சொல்றாரா? இந்த ஊரிலேயே இருக்கும் கொத்தவால் சாவடிதானே?

அரு (ஆத்திரமும் கோபமும் பொங்க): இதோ இப்பவே நான் கிளம்பிடறேன் பார்!

கமலி: இப்போ போகாதே. அந்த வீட்டைத் திறந்து காட்ட ராத்திரி ஒன்பது மணிக்குத்தான் அந்த வீட்டுக்காரனுக்கு ஒழியுமாம்.

அரு (கோபம் மேலும் கொந்தளிக்க): உன்னோட வீட்டுக்கு யார்டீ போகப்போறா... எல்லோரும் என்னை மனுஷன்னு நெனைச்சேளா மாடுன்னு நெனைச்சேளா? இப்பவே காஷாயம் வாங்கக் காசிக்குக் கிளம்பிடறேன்!

சீதா: இதென்ன திடும்னு காசி யாத்திரை நினைவு வந்துடுத்து? நம்ப கல்யாணத்திலே கூடக் காசி யாத்திரை நிகழ்ச்சியை நன்னா நடக்க விடாமே வைர மோதிரம் வேணும்னு உங்கப்பா ஒத்தைக் காலிலே நின்னார்... இன்னும் அஞ்சு வருஷத்துலே வரும் அறுபதாம் கல்யாணத்துக்குக் கூடக் காசி யாத்திரை நிகழ்ச்சி கிடையாதேன்னு இப்ப நீங்களா நடத்திக்கிறேளாக்கும்!...

அரு (கோபத்துடன் துண்டை உதறித் தோள் மீது போட்டபடி வாசலுக்கு விரைந்து கொண்டே): என்னது? அவ்வளவு அலட்சியமாகவா போய்ட்டேன்? இப்பவே கிளம்பிடறேன், பார். (வாசற்படியில் காலடி வைத்து இறங்குகிறார்).

கிட்டு: அப்பா! அப்பா! அதோ அத்திம்பேரே சைக்கிளில் வருகிறார் பார்.

அரு: வரட்டுமே. நீங்களாச்சு உங்க மாப்பிள்ளையாச்சு (தெருவில் இறங்குகிறார்).

கிட்டு (பாடுகிறான்): **நல்ல சகுனம் நோக்கிச் சொல்லப்பா, நீ போகும் பாதை அறிந்து செல்லப்பா.**

*(அருணாசலம் அவனை விழித்துப் பார்த்து விட்டுத் தெருவில் நடந்து சென்றுவிடுகிறார். மற்றொரு பக்கத்திலிருந்து சேகர் சைக்கிளில் வந்து இறங்குகிறான்.)*

சேகர்: என்ன இது, மாமா எங்கேயோ கோபமா கிளம்பறாரே?

சீதா: ஐயோ, நான் என்னத்தைச் சொல்ல? காஷாயம் வாங்கக் காசிக்குப் போறேன்னு கிளம்பிட்டாரே.

2

*(அருணாசலம் ஒரு சத்திரத்துத் திண்ணையில் அமர்ந்து கொண்டிருக்கிறார்.*

அரு: காஷாயம்னுக்கூட இலேசப்பட்டதா தோணலே. கார்த்தாலே வயிறு நிறைய இட்லியைச் சாப்பிட்டப்புறம்தானே தோவிச்

கண்டு ளெம்பினேன். இப்ப என்னடான்னு இந்த வயறு 'டு லெட்' போர்ட் மாட்டிட் டேன்னு காட்டறது. ஏதோ ஒண்ணோ ரெண்டோ ஷர்ட் பாக்கெட்டிலே இருக்கும். அதை வெச்சண்டு எப்படி....?

[அடுத்த வீட்டு நாயுடு கையில் ஒரு டப்பாவுடன் பரக்கப் பரக்க ஓடிவருகிறார்.]

நாயுடு: ஸார், ஸார்... நல்லவேளை. கண்டு பிடிச்சுட்டேன். உங்க மாப்பிள்ளைதான் உத் தேசமா நீங்க இந்த இடம்வரைக்கும் போயி ருப்பீங்கன்னு சொன்னாரு.

அரு: என்னைக் கூட்டிண்டு வர உங்களை அனுப்பினானாக்கும். அதெல்லாம் நான் லேசுலே திரும்புகிறவனில்லே.

நாயுடு (தயங்கித் தயங்கி) அது சரிங்க... நீங்க கோவிச்சுக்கப்படாதுங்க...

அரு: (அவரைப் புரிந்துகொள்ளாமல்) பின்னே கோவிக்கக்காம கொஞ்சுவேனா? எனக்கும் மானம் மரியாதைன்னு ஒண்ணும் கிடையாதா?

நாயுடு: ஆமாங்க... (குழைவுடன்) நீங்க தப்பா எடுத்துக்கப்படாதுங்க. நான் சொல்ல வந்த விஷயம்....

அரு: விஷயம் சொல்லச் சொல்லி மாப் பிள்ளை அனுப்பிச்சானாக்கும்! நான் ஒரு விஷயமும் கேட்கத் தயாரில்லேன்னு அவனிடம் சொல்லிடும் போய்....

நாயுடு: பாவம், மாப்பிள்ளை மேலே ஏதுக் குங்க கோபப்படறீங்க? நீங்க இப்படி வந் துட்டதுமே உங்க மனைவிக்குக்கூடத் துக்க மாக இருக்கும். அதையும் ஒத்தி வெச்சிட்டு, மாப்பிள்ளை வந்திருக்காரேன்னு அந்த அம்மா பாதாம் அல்வாவும் கரம் பகோடாவும் செய் தாங்க போலிருக்கு. ஒங்க மாப்பிள்ளை அதைக்கூடத் திரும்பிப் பார்க்காம தலையைத் தொங்கப்போட்டு எங்கிட்டேவந்து நிக்கிறாரு.

அரு: நின்னு, வீட்டுக்குத் திரும்பி அத்தனை யும் சாப்பிடச் சொல்லுங்க. வெட்டி ஆளுன்னு என்னை எல்லாரும் நினைச்சுட்டா..: 'காப்பிக் கொட்டையா ஐயாகிட்டே சொல்லு' வீட்டுக் கணக்கா, 'அப்பா எங்கே' சிநேகிதனுக்கு விடா— 'மாமா இருக்காரே' இப்படி எல்லாத்துக்கும் நான் இளைச்சுட் டேனா.....இல்லே, நானும்தான் கேட்கிறேன். சொல்லுங்க, நீங்களே....

நாயுடு: ஆமாங்க, நானும் ஒத்துக்கறேன்.

அரு: என்னை இளிச்சவாயனா ஆக்கிட் டாங்க எல்லாரும். எனக்குப் பொறுக்கலே, உடனே கிளம்பிட்டேன். காஷாயம் வாங்கக் காசிக்குப் போறது ஒண்ணுதானே வழி?

நாயுடு: நீங்க செய்துட்டது எனக்கு ரொம்பப் பிடிச்சுப் போச்சுங்க. அந்த வழியிலே அப்படியே நில்லுங்க. உங்களை நானும் ஆமோதிக்கிறேனுங்க.

அரு (திடுக்கிட்டு): என்ன சொல்றேன்?

நாயுடு: நீங்க செய்தது நல்ல காரியம். இப்படிச் சட்டுனு எல்லாத்தையும் விட்டுட்டு வந்துடறதுன்னு அது ஒசந்த மனசாத்தான் இருக்கணும். ஒங்களைப் போல யாராலே தான் உதறித் தள்ளிட்டு வந்துட முடியும்? அந்த விரக்தி மனசை நினைச்சுத்தானே இந்த டப்பாவைத் தூக்கிக்கிட்டு ஓடி வந்தேன்.

அரு: அடாடா, எனக்குன்னு சாப்பாடு கிப்பாடுன்னு ஏதாவது எடுத்துண்டு வந் துட்டேளாக்கும்.

நாயுடு: ஆங், அதெல்லாம் ஒங்க வைராக் கிய மனசை நான் கெடுத்துட்டுப் பாபம் செய்துக்க மாட்டேனுங்க. பாசம், மோகம்ற வலையிலே நீங்க சிக்க மாட்டீங்கன்னு எனக் குத் தெரியும்...... ஒண்ணுமில்லேங்க, இந்த டப்பாவிலே முந்திரிப் பருப்பு இருக்கு. லஞ்சமா பணம் வாங்கக் கூடாதுன்னு எவனோ ஒருத்தன் எங்கிட்டே பண்டமா இதைத் தள்ளிட்டான். எங்க மச்சான் காசியிலே வேலையாகி அங்கிருக்கான். அவ னுக்கு முந்திரின்னு உசிரு. உங்களை வந்து அவனையே பார்க்கச் சொல்றேன். அவங் கிட்டே இதைக் கொடுத்திடுங்க..... வேறு மனுசங்ககிட்டே கொடுத்தனுப்ப எனக்கு விருப்பமில்லேங்க. ஏன்னா, சாப்பிடற பண்டம் பாருங்க, அவங்க பாதி 'அபேஸ்' பண்ணிடு வாங்க.

அரு (திடுக்கிடுகிறார். அதே நேரத்தில் ஒரு பதில் தோன்ற): அதெல்லாம் சரி நாயுடு. ஆனால் நான் இப்ப நேரே காசிக்குப் போறது சந்தேகம்தான். ரிஷிகேசம் போனாலும் போவேன்.

நாயுடு: அப்ப இன்னும் நல்லதாப் போச்சு. அங்கே வர யாத்திரைக்காரங்களுக்குக் குறைச்ச விலைக்கு வித்துடுங்க. யாத்திரைக் காரங்களுக்கு வித்தா நல்லது. புண்ணியம் சேரும்.முழுப் பணமும் சேர்ந்தப்புறம் எனக்கு எம். ஓ. அனுப்பிடுங்கன்னு போதும். நீங்க அதுலே செல்லாக் காசு தொடமாட்டீங் கன்னு எனக்குத் தெரியும். நான் வர்றே னுங்க. (டப்பாவை அவர் அருகில் வைத்து விட்டுத்தெருவில் இறங்கிச் சென்றுவிடுகிறார்.)

அரு: நாயுடு! நாயுடு.....! (நாயுடு காதில் போட்டுக் கொள்ளாமலே ஓடி விடு கிறார்) அட ராமா! இது ஒரு பாரம் சேர்ந் துடுத்தே...... முந்திரி சாப்பிட்டு எத்தனை நாளாச்சு? சீதா, பர்பி செய்வாளே, நன்னா யிருக்கும்...... ம், பாதாம் அல்வாவும், கரம் பகோடாவும் எனக்குப் பிடிக்கும்னு தெரிஞ்சும் மாப்பிள்ளைக்குப் பண்ணியிருக்கா ளாம். சீதாவையாவது கூட அழைச்சிண்டு வந்திருக்கலாம். ருசியா சமைப்பாள். உம்.. இன்னும் கொஞ்சம் நேரம் போனா வயத்துப் பாட்டுக்கு இந்த முந்திரியைத்தான் சரண் அடையணும் போலிருக்கு.

(தெருவில் இறங்கி நடக்கிறார். எதிரில் நாணுப் பாட்டி வருகிறாள்)

நாணுப்பாட்டி: அடாடா! கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தாப்பலே உன்னைப் பார்த்தாச்சு. ஏண்டா, அருணா சலம், நான் யாருன்னு தெரியுமோல்லியோ?

அரு: சரியாத் தெரியலையே.

நாணு: அதாண்டா உன்னோட மாப் பிள்ளை சேகர் இருக்கானே, அவன் மாமா வுக்கு மச்சினனோட சொந்த மாமியாருக்குச் சொந்த அக்கா நான். சேகர் கலியாணத்திலே என்னைப் பார்த்திருப்பியே. இப்பதான் சேகர் முகத்தைத் தொங்கப் போட்டுண்டு வந்து சொன்னான். அடுத்த நிமிஷம் நான்

அங்கே நிக்கலே, உன்னைத் தேடிண்டு கிளம்பிட்டேன்.

அரு (எரிச்சலுடன்): காசியிலேயிருக்கும் உங்க பெண்ணுக்குச் சாமான் தரப் போறேளா?

நாணு: காசியிலே ஏதுடா எனக்குப் பெண்? எல்லாம் இங்கேதான் இருக்கு. பெண்ணாவது, பிள்ளையாவது, எல்லாம் வெறுத்துப் போச்சுடா எனக்கு.... ஒரு ஊட்டி உண்டா, ஒரு காஷ்மீர் உண்டா? அதெல்லாம்கூடக் கிடக்கட்டும். இந்தச் சின்ன ஊர் காசிக்காவது அழைச்சிண்டு போறனா.. உம், அந்தக் கதையெல்லாம் உனக்கு வேண்டாம்டாப்பா....உன் பின்னோடேயே நானும் வரேன், காசி விசாலாட்சி அம்மனைக் காட்டிப்பிட்டுப் புண்ணியம் கட்டிக்கோடாப்பா.....

அரு: ஐயையோ, என்னோடு காசிக்கா கிளம்பறேன்?

நாணு: ம் என்னை அழைச்சண்டு போறதிலே என்னடாப்பா கஷ்டம்? நீ நிக்கற இடத்துலே நிக்கறேன்.

அரு: அதுக்கில்லே பாட்டி...... இப்ப வந்து.......

நாணு: ஸ்டேஷனுக்குப் போகணுமேன்னு தானே யோசிக்கிறே? அந்தத் தயாரிப்போடு தான்டா வந்திருக்கேன். நேரே ஸ்டேஷனுக்குப் போகிற ஏற்பாட்டிலே மூட்டையோடு வந்துட்டேன் பார்.

அரு: ஹரே ராம், காசி போனாலும் சனீசுவரன் விடாது போலிருக்கே.

(நண்பர் சோமு ஓடி வருகிறார்)

சோமு: ஏண்டா, அருணா, இதென்னடா இப்படி?

அரு: பின்னே என்ன செய்யச் சொல்றியாம்?

சோமு: ஒண்ணும் செய்யச் சொல்லலே. காசிக்குப் போனாலும் சொர்க்கத்துக்குப் போனாலும் எல்லாம் தொறந்துட்டுப் போகணும். ஒரு பண்டத்திலேயும் ஆசை இருக்கக் கூடாது.

அரு: ஓ! இந்த டப்பியைச் சொல்றியா? இதுலே நாயுடு முந்திரி......

சோமு: முந்திரிக் கொட்டை மாதிரி நீயா ஏண்டா முந்திரி டப்பாவைப் பத்திச் சொல்றே? நான் உன் பொடி டப்பியைச் சொல்றேன். அதை எதுக்கு இடுப்பிலே இருக்க முடிஞ்சண்டு கிளம்பி யிருக்கே? பெண்டு பிள்ளைகளை விட்டவன் இந்தப் பொடி டப்பியை விடணும். அந்தப் பொடி டப்பியை என்கிட்டே தந்துக் கொடுத்துட்டுப் புண்ணியம் சம்பாதிக்கப் போய்க்கோ....

அரு: ஐயோ பொடியில்லாமல் இருப்பேனோ....?

சோமு: காஷாயத்துக்கும் அதுக்கும் ஒத்துக்குமோ...?

அரு (பளிச்சென மனத்தில் ஓர் எண்ணம் தோன்ற): காஷாயமா? என்னடா சொல்றே?

சோமு: அதான் காஷாயம் வாங்கக் காசிக்குக் கிளம்பிட்டேன்னு உன் மாப்பிள்ளை வந்து அழுதானே.....

குட்டிக் கதை

# காதல்

மலர் விரிந்து மணம் பரப்பிற்று. அந்த மணத்தையே தனக்கு விடுத்த அழைப்பாகக் கொண்டு அதைத் தேடி வந்தது ஒரு வண்டு.

ரீங்......ரீங்......ரிரி......ரீங்......ரீங்......

வந்துவிட்டாயா, என்னைச் சுற்றிச் சுற்றி வந்து ரீங்காரம் பாட என்றது மலர் தென்றலில் சற்றே அசைந்து.

'நானு வந்தேன், மணம் கமழும் உன் மணமல்லவா என்னை இங்கே வரவழைத்தது? மகிழ்வூட்டும் உன் அழகல்லவா என்னைப் பாட வைத்தது?'

'போதும். யாராவது கேட்டால் சிரிக்கப் போகிறார்கள்!'

'யார் சிரித்தால் என்ன? அந்தச் சிரிப்பெல்லாம் உன் சிரிப்புக்கு ஈடாகுமா?' என்றது வண்டு.

மலர் பொறுமை இழந்து, யாரை ஏமாற்ற இந்தப் பேச்செல்லாம்? என்று கடுகடுத்தது.

ஐயோ, இது அபாண்டம்! யுகம் யுகமாக உன்னைக் காதலிக்கும் நானாவது உன்னை ஏமாற்றுவதாவது? என்றது வண்டு பரிதாபமாக.

மலர் சிரித்தது. ஏன் சிரிக்கிறாய்? என்று கேட்டது வண்டு.

ஒன்றுமில்லை, என்னை நீ ஏன் காதலிக்கிறாயாம்? என்றது மலர் கேலியாக.

இது என்ன கேள்வி, உன் மேல் கொண்ட அன்புக்காக! என்றது வண்டு.

'ம், அப்புறம்?'

'நீ இல்லாமல் நான் வாழ முடியாது என்பதற்காக!'

'உண்மையாகவா?'

'சத்தியமாக!'

இந்தச் சத்தியத்துக்கு மேல் மலர் தன்னைக் கேட்பதற்கு என்ன இருக்கிறது என்று நினைத்த வண்டு மெல்ல அதை நெருங்கிற்று.

'எட்டி நில்!' என்றது அது.

'ஏன்?' என்று கேட்டது இது.

'பொய்; நீ சொன்னவையனைத்தும் சுத்தப் பொய்!'

'பொய்யா?'

'ஆமாம்; எதற்காக 'நீ என்னைக் காதலிக்கிறாய் என்று எனக்குத் தெரியும்!'

'எதற்காக?'

'என்னிடம் இருக்கும் தேனைச் சுவைப்பதற்காக!'

இதைக் கேட்டதும் வண்டு சிரித்தது. 'ஏன் சிரிக்கிறாய்?' என்று கேட்டது மலர்.

'நதி மூலம், ரிஷி மூலத்'தைப் போலக் காதல் மூலத்தையும் ஆராயக் கூடாது பெண்ணே, காதல் மூலத்தையும் ஆராயக் கூடாது என்றது வண்டு.

— விந்தன்



நாணு: அதையேதான் நானும் சொன்னேன்.

அரு (சிரித்து விட்டு): சரியாய்ப் போச்சு, அவன் சொன்னது உங்களுக்குப் புரியலே. லொக்கு லொக்குன்னு இருமலா இருந்தது. கஷாயம் வாங்கக் 'காசி ஆயுர்வேதிக் பார்மஸி'க்குப் போறேன்னு சொன்னேன். அவன் மாமனருக்கு உடம்பு சரியில்லேயென்னு வருத்தத்தோடு சொன்னதினலே அவன் சொன்னதை நீங்க புரிஞ்சுக்கலே. சோமு! பொடி டப்பியெல்லாம் தத்துப் போற வழக்கமில்லே. நீ போய்ட்டு வா..... பாட்டி! சொந்தமா ஒரு ஏரோப்ளேன் பண்ணப் போறேன். அது முடிஞ்சதும் காசி ஸ்பெஷல் விடறேன்.

3

கிட்டு: அப்பா வந்தாச்சு.... அப்பா வந்தாச்சு....

மற்றவர்கள்: வந்தாச்சா....எங்கேடா..? எங்கே.......?

கிட்டு: அடாடா, காசியாத்திரை கிளம்பித் திரும்பிய மாப்பிள்ளைக்குத் தேங்காய் கொடுத்து எதிர் அழைக்க ஒரு மாமனர் இல்லேயென்னு வருத்தமாயிருக்கு. அப்பா கையிலே டப்பியிலே காசியிலேயிருந்து ஏதோ சாமான்கூட வந்தாச்சு.

சேகர்: காசி சாமான் வரும்டா வரும்! நான் என் கைவிட்டுக் கடனிலே மூந்திரி வாங்கி நாயுடுவை அனுப்பினேனுக்கும். நாயுடுவுக்குக் காசியிலே ஒருத்தரும் கிடையாது.

பாக்கி: நம்ப சேகரைப் போல் ஒரு மாப்பிள்ளை இனிமே தேடினக்கூடக் கிடைக்காது. நாயுடு, நாணுப் பாட்டி, சோமு எல்லாரையும் அனுப்பிக் கோவிச்சுண்டு போன என் பிள்ளையைத் திரும்பி வரும்படி உபாயம் செய்து ஏற்பாடு செஞ்சானே, அவன் தீர்க்காயுசா நன்னயிருக்கணும்.

அரு: அடப்பாவி, ஏம்ப்பா சேகர் நீயேவா திரும்பி வா ஏற்பாடு செஞ்சே? அந்த நாணுப்பாட்டி காசிக்கு வரேன்னு...

சேகர்: அந்தப் பாட்டி கழுத்தைப் பிடிச்சுத் தள்ளினக்கூடக் காசிக்குப் போக மாட்டா. இங்கே யதேச்சாதிகாரமா தினம் ஒரு சினிமாநாடகம்ன்னு அடிக்க நகத்தருளே! அவளுக்குக் காசியெல்லாம் ஒத்துக்குமோ..... நான்தான் பாடம் சொல்லித் தந்து அனுப்பினேன்.... பின்னே என்ன மாமா, நீங்க பாட்டுக்குக் கோவத்துலே நிசமாவே காசிக்குப் போய்விட்டால் என்ன பண்றது?

அரு: போகட்டும், உனக்காவது என் மேலே கரிசனம் இருக்கே.....

சேகர்: கரிசனம் இல்லாம இருக்குமா? தீவிளிக்குத் தீவிளிதான்னாலும் தீபாவளி சமயத்துலே இன்னமும் மறக்காம நீங்க மாப்பிள்ளை மரியாதைன்னு எனக்குப் பத்தோ இருபதோ கொடுக்கறேள். அது ஒண்ணுதான் கமலி கைக்குப் போயிடாமல் என் சொந்தச் செலவுக்குன்னு உபயோகமாகிறது. நீங்க காசிக்குப் போயிட்டா எனக்கு யார் அந்தப் பணம் கொடுப்பாளாம்? நீங்க இப்ப திரும்பிட்டேள், எனக்கு நிம்மதியாய்ப் போச்சு...... நான் போய்ட்டு வரேன்.... வா கமலி, நம்ப போகலாம்.

(சிரித்தபடி இருவரும் சென்று விடுகின்றனர்.)

அரு: அட, மாப்பிள்ளையே!

(பின்னல் விசும்பல் சத்தம் கேட்கிறது. சீதா கையில் டிபன் தட்டும் கண்ணில் கண்ணீருமாக நிற்கிறள்.)

அரு: அடாடா! நீ ஏதுக்கு அழறே?

சீதா: நீங்கபாட்டுக்கு என்னை விட்டுட்டு...

அரு: அட அசடே! இதோதான் திரும்பி வந்துட்டேனே! ஏதுக்கு அழறே?

சீதா: பின்னே அழாம இருப்பாளா? என்னை விட்டுப் போக உங்க மனசு கேட்காது. எப்படியும் திரும்பி வருவேன்னு எனக்குத் தெரியும். அதனலே உங்களுக்குப் பிடிச்ச அல்வாவும் பகோடாவும் செஞ்சு வெச்சுண்டு என் வாயிலே ஒண்ணுகூடப் போடாம உங்களுக்காகக் காத்திண்டிருக்கேன். நீங்களானு 'ஏதுடா கோபிச்சுண்டு போறேமே, சீதா என்ன தவிக்கிறளோ, இப்ப திரும்பிப் போகச்சே அவ மனசை சந்தோஷப்படுத்திச் சமாதானம் செய்ய ஏதாவது வாங்கிண்டு போவோம்னு நினைச்சு ஒரு கட்டு கதம்பமாவது வாங்கிண்டு வந்தேளா, பழமாவது வாங்கிண்டு வந்தேளா?

(மேலும் கண்ணைக் கசக்குகிறள்.)

அரு: அட தேவுடா!

(தலையில் கை வைத்து விட்டார்.)

## செய்திப் படங்கள்

1. அணு ஆராய்ச்சிக் கழகத்துக்கு முதன் முதலில் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள பெண்மணி குமாரி கே. லலிதா. அது மட்டுமல்ல; அணு ஆராய்ச்சித் துறைக்கு அவர் ஒருவர் மட்டுமே தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார் என்பது பெருமைப்படத் தக்க விஷயம். 2. திரு எஸ். ஜி. ரத்தினமய்யர் அவர்களுக்குக் காஞ்சி காமகோடி பெரியவர்களின் நல்லாசியோடு 'சிவம் பெருக்கும் சீலர்' என்றபட்டம் வழங்கப்பட்டது. 3. மகாராஷ்டிர ராஜ்ய உதயத்தின் ஐந்தாவது வருடக் கொண்டாட்டத்தில் குமாரி மைதிலி நடனமாடினள். 4. ரிஷிகேசம் தெய்வீக வாழ்க்கை சங்கத் தலைவர் சுவாமி சிதானந்தர் விட்டில் பிளவர் கம்பெனிக்கு விஜயம் செய்தார். 5. பூம்புகாரில் நடைபெறும் கீழ்த் திசைக் கல்லூரிக்குத் திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் திருவிடைமருதூர் ஸ்ரீ மகாலிங்க சுவாமி தேவஸ்தானத்திலிருந்து லட்சரூபாய் நன்கொடை வழங்கியுள்ளார்.

# பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்கம் பவுடர்

இதமான நறுமணம் கொண்டது
புத்துணர்ச்சி யளிக்கிறது
வியர்வையை உறிஞ்சுகிறது




ஸ்நானத்திற்குப் பின் அனுபவமாகும் புத்துணர்ச்சி நீடித்து நிற்க, நாள் முழுவதும் நறுமணத்துடன் திகழ, பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்கம் பவுடர் உபயோகியுங்கள். இதமான வாசனையுள்ள இந்த டால்கம் பவுடர் வியர்வையை விரைவில் உறிஞ்சி, எல்லாக் காலநிலைகளிலும், உங்களை நாள் முழுவதும் குளுமையுடனும் மனோ உல்லாசத்துடனும் வைக்கும். பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்கம் பவுடர் குடும்பத்தினர் அனைவர்க்கும் ஏற்றது.

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது)

**யாவரும் வாங்கக்கூடிய**
**உயர்தர டால்க்**

JWT-P-3216



# மேதை மெச்சிய மேதை

"...நான் செய்ய விரும்பும் நாட்டுப் பணி பொது மேடைகளில் அல்ல; அமைதியான என் ஆராய்ச்சி அறையில்..."

★

**1939** அக்டோபர் இரண்டாந்தேதி. காந்தி ஜயந்தி. நாடெங்கும் விடுதலைப் போராட்டம். மக்களிடையே கொந்தளிக்கும் தேசிய உணர்ச்சி. சர்வகலாசாலைகளில் படித்து வந்த எங்களைப் பற்றிக் கேட்பானேன்? பிறந்து வளர்ந்த ஊரை விட்டுச் சுமார் ஆயிரம் மைல் தூரத்தில் இருக்கும் வால்டேரில் ஆந்திர சர்வகலாசாலை விஞ்ஞான உயர் கல்லூரியில் கெமிக்கல் டெக்னலஜி ஆனர்ஸ் முதல் வகுப்பில் படித்து வந்தேன். என்னோடு போத்துக்குச்சி ராமச்சந்திர ராவ் என்பவர் படித்துக் கொண்டிருந்தார். அவர் தற்போது ஜோர்ஹாட் கேந்தரிய ஆராய்ச்சி மன்றத்தில் பொறுப்புடைய அதிகாரிகளில் ஒருவராக விளங்குகிறார். இருவரும் ஒரு சதியாலோசனையில் புகுந்தோம். எங்கள் இரசாயனப் பேராசிரியர் எப்பொழுதும் மேனாட்டுப் பாணியில் காட்சியளிப்பவர். அவர் வகுப்பில் நுழைந்ததும், "மகாத்மா காந்திக்கு" என்று முதலடியை ராமச்சந்திர ராவ் கூற நான் உரக்க 'ஜே' போட்டேன்.

பேராசிரியர் இதைப் பொருட்படுத்தாதவர் போலப் பாடத்தை நிதானமாக ஆரம்பித்தார், ஒரு சிறு முன்னுரையோடு. "உங்கள் தீவிர தேசபக்தியை மெச்சுகிறேன். நம் நாட்டு விடுதலையில் உங்களைப் போலவே எனக்கும் ஆர்வம் உண்டு. 'மகாத்மா காந்திக்கு ஜே' என்று வாய் வலிக்கும் வரை கூக்குரல் இட்டால் மாத்திரம் நம் கடமையைச் செய்ததாகி விடாது. நான் செய்ய விரும்பும் நாட்டுப் பணி பொது மேடைகளில் அல்ல; அமைதியான என் ஆராய்ச்சி அறையில். தனிமையில் கையில் சோதனைக் குழாயைப் பிடித்து, 'இதுதான் என் அளவில் நாட்டுக்கு நான் அளிக்கும் பணி' என்று ஊக்கத்துடன் இன்று இரண்டு மணி நேரம் அதிகமாகவே ஆராய்ச்சியில் ஈடுபடுவேன்" என்று உணர்ச்சியுடன் சொல்லிப் பாடத்தை ஆரம்பித்தார்.

எங்கள் இராசயனப் பேராசிரியர் வேறு யாருமல்ல. இன்று பாரத நாட்டு விஞ்ஞான உலகத்தின் தலைசிறந்த இரசாயனி என்று எல்லோராலும் போற்றப்படும் டாக்டர் டி. ஆர். சேஷாத்திரி எப். ஆர். எஸ். அவர்கள்தான். நம் மக்களும் அயல்நாட்டு விஞ்ஞானிகளும் புகழ் மாலை சூட்ட, ராயல் சொஸைட்டியின் அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு நம் நாட்டுக்கு அழியாப் புகழைத் தேடித் தந்திருக்கும் பேராசிரியர் திருவேங்கடத்து ராஜேந்திர சேஷாத்ரி திருச்சி ஜில்லாவைச் சேர்ந்த குளித்தலையில் ஒரு வைதிக வைணவ குலத்தில் 1900 பிப்ரவரி மூன்றும் தேதி பிறந்தார். ஸ்ரீரங்கத்திலும் திருச்சிராப்பள்ளியிலும் ஆரம்பக் கல்வி பெற்று, கல்லூரிப் படிப்புக்காக 1917ல் சென்னைக்குச் சென்றார். பெற்றோர்களின் பொருளாதார நிலையை மட்டும் நம்பிச் சென்னையில் மேற்படிப்பை முடித்துக் கொள்ள அவரால் இயலவில்லை.

சென்னை ராமகிருஷ்ண மடமும், மடத்தைச் சேர்ந்த மாணவர் விடுதியும் அவர் படிப்புக்கான பண உதவியை அளித்தன. அதோடு அவருடைய வருங்கால வாழ்க்கை மேலும் மேலும் உயர்ந்த லட்சியங்களை நாடும்படியான சூழ்நிலையாகவும் அமைந்தன. ராஜதானிக் கல்லூரியில் ரசாயனத்தில் ஆனர்ஸ் பட்டம் பெற்று, காலஞ்சென்ற பேராசிரியர் பி. பி. டேயின் மேல் பார்வையில் மூன்று ஆண்டுகள் தாவர மூலிகைகளைப் பற்றி ஆராய்ச்சி செய்தார். 1927–ல் அரசாங்கத்தாரின் பண உதவியுடன் இங்கிலாந்து சென்று, மான்செஸ்டர் மாநகரத்தில் பேராசிரியர் ராபர்ட் ராபின்ஸன் அவர்களிடம் ஆராய்ச்சி மாணவனுகச் சேர்ந்தார். 1929ல் டாக்டர் பட்டம் பெற்று ஓராண்டுக் காலம் ஜெர்மனியில் பேராசிரியர் ப்ரெகலுடன் ஆராய்ச்சி செய்தார். 1930ல் தாய்நாடு திரும்புவதற்கு முன் எட்டு மாதகாலம் எடின்பரோ சர்வகலாசாலையில் பேராசிரியர் பார்ஜருடன்

●★●★●★● டாக்டர் ஸி. ஆர். கிருஷ்ணமூர்த்தி ●★●★●★●

சிட்ரோசின் எனும் மூலிகையின் ரசாயன அமைப்பைப் பற்றி ஆராய்ந்தார்.

சேஷாத்திரி தாய்நாடு திரும்பிய நாட்களில் நமது நாட்டின் பொருளாதார நிலைமை மிகவும் தாழ்ந்த நிலையில் இருந்தது. படித்துப் பட்டங்கள் பெற்றவருக்கே வேலை கிடைப்பது மிகவும் அரிது. இரசாயன ஆராய்ச்சிகளைத் தடையேதுமில்லாமல் நடத்துவதற்கான வசதிகளைக் கொண்ட ஸ்தாபனங்களும் நாட்டில் ஒன்றோ இரண்டோதான் இருந்தன. ஆங்கிலப் பேராசிரியர்களின் சிபாரிசை நாடியிருந்தால் ஆங்கிலக் கம்பெனிகளில் உயர்ந்த சம்பளத்தில் ஏதாவது வேலை கிடைத்திருக்கலாம். ஆனால் ஆராய்ச்சி செய்வதிலேயே ஆர்வம் கொண்ட சேஷாத்திரி இதை விரும்பாமல் சென்னை சர்வகலாசாலை அளித்த நூற்றைம்பது ரூபாய் உபகாரச் சம்பளத்தை ஏற்றுக் கொண்டார்.

சில மாதங்கள் சென்னையில் இருந்தபின் கோவை விவசாய ஆராய்ச்சி மன்றத்தில் ஆராய்ச்சியாளராகச் சேர்ந்தார். மூன்று வருட காலம் தாவரங்களைக் குறித்தும், நிலம், உரம் இவைகளின் ரசாயனத் தொடர்பைப் பற்றியும் பல ஆராய்ச்சிகள் நடத்தினார். ஆராய்ச்சியின் முன்னேற்றத்துக்குத் தேவையான வசதிகளும், போதுமான கருவிகளும், பண உதவியும், அவர் திறமையைக் கண்டு ஊக்கமளிக்கும் ஆதரவும் சேஷாத்திரிக்குக் கோவையில் அன்று கிடைக்கவில்லை என்பது வருந்தத் தக்க விஷயம்.

## திறமை மலர்ந்தது

அரசாங்க வேலைகளைத் துறந்து ஆந்திர சர்வகலாசாலையில் ஒரு லெக்சரர் பதவியை 1933ல் ஏற்றுக் கொண்டார். அந்நாட்களில் சர்வகலாசாலையின் உப தலைவராக இருந்தவர் டாக்டர் சர்வபள்ளி ராதாகிருஷ்ணன். ஆந்திர சர்வகலாசாலை விஞ்ஞானத்திலும், கலைகளிலும் உயர்ந்த ஸ்தானத்தைப் பெற வேண்டும் என்று டாக்டர் ராதாகிருஷ்ணன் நாட்டின் பல்வேறு பாகங்களிலிருந்தும் கல்வியில் சிறந்த பல பேராசிரியர்களை வால்டேருக்கு வரும்படி அழைத்து அவர்களுக்கு வேண்டிய வசதிகளை அளித்து வந்தார். ராதாகிருஷ்ணன் பதவியிலிருந்து விலகியபின் உப தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட காலம் சென்ற டாக்டர் சி. ஆர். ரெட்டி, மேதைகளைக் கண்டுபிடித்து அவர்களின் திறமை மலர்ந்து பரிமளிப்பதற்கு ஊக்கமளிப்பதில் ஸர் ஆசுதோஷ் முகர்ஜியை விட ஓரளவுக்கு அதிக ஆர்வம் கொண்டவர்.

டாக்டர் சி. ஆர். ரெட்டியின் செல்லப் பிள்ளை என்று கருதப்பட்ட சேஷாத்ரியின் செல்வாக்கைப் பற்றிக் கேட்பானேன்? அத்துடன் அவர் தம் இலாகாவை முன்னேறச் செய்வதில் அளவில்லாத உற்சாகம் காட்டவே இரசாயன இலாகா நம் நாட்டிலேயே இரசாயன ஆராய்ச்சியின் முதல் அணியில் இடம் பெற்றுக் கொண்டது. 1949ல் ஸர் மாரீஸ் க்வயரின் அழைப்புக்கிணங்கி டில்லி சர்வகலாசாலையின் இரசாயனப் பேராசிரியர் பதவியை ஏற்றுக் கொண்டார். இவர் வந்தபின் டில்லியில் இரசாயனம் புத்துயிர் பெற்றுத் துலங்கியது.

1934லிருந்து 1959 ஆண்டுவரை, இருபத்தி ஐந்து ஆண்டுகளில் பேராசிரியர் சேஷாத்திரியிடம் பாடம் கேட்ட உயர்தர மாணவர்களின் எண்ணிக்கை ஐந்நூறு. அவர் மேல் பார்வையில் ஆராய்ச்சிகள் நிகழ்த்தி டாக்டர் பட்டம் பெற்ற நபர்களின் எண்ணிக்கை 57. இம்மாணவர்களில் பலர் இன்று நமது நாட்டில் பெரிய கல்விச் சாலைகளிலும் ஆராய்ச்சி மன்றங்களிலும் பொறுப்பான பதவிகளைத் திறமையுடன் வகித்து, ஆசிரியரின் புகழ் என்றென்றைக்கும் நிலைக்கும்படி உழைத்து வருகின்றனர்.

## மலர்களின் வர்ணங்கள்

ஐந்நூறுக்கு மேற்பட்ட ஆராய்ச்சிக் கட்டுரைகளும் நூல்களும் கொண்ட பேராசிரியர் சேஷாத்ரியின் விஞ்ஞானப் படைப்பின் சாராம்சத்தை ஓரிரண்டு வரிகளில் அடக்க முயலுவது இயலாத காரியம். சேஷாத்திரியின் சாதனைகளை மதிப்பிடுவதற்கு இரசாயன சாஸ்திரத்தின் வரலாற்றைச் சிறிதளவேனும் கவனித்தாக வேண்டும். உயிரினங்களின் பல்வேறு உறுப்புக்களில் பொதிந்து கிடக்கும் ரசாயனப் பொருட்களைக் கண்டுபிடிப்பது; அப்பொருட்களைச் சுத்தமாகப் பிரித்தெடுப்பது, பிரித்தெடுத்த பொருட்களின் அமைப்பை ஆராய்வது; ஆராய்ந்து நிர்ணயிக்கப்பட்ட அமைப்பு இயற்கை அமைப்புக்கு நிகரானதா என்று பரிசோதிப்பது; இதன் பொருட்டு அவ்வமைப்பைக் கொண்ட பொருள்களைச் செயற்கை வழியாகச் சிருஷ்டி செய்வது; குறித்த ஒரு ரசாயனப் பொருள் உயிரினங்களில் எவ்வாறு தோன்றுகிறது என்று ஆராய்வது.—இப்பெரும் பணிகள்தாம் இரசாயன ஆராய்ச்சியின் நோக்கம்.

செடி கொடிகளிலும், மலர்களிலும் இயற்கை பலதரமான வண்ணங்களைத் தீட்டியிருக்கிறது. கேவலம் பார்ப்பவர்களின் இன்ப உணர்ச்சியைத் தூண்டுவதற்கெனவும் வண்ணத்துப் பூச்சிகளைத் தங்கள் வசம் இழுத்து வம்ச விருத்தியின் சூழ்ச்சியை நிகழ்த்துவதற்கெனவுமே இவ்வண்ண ஜாலங்கள் மலர்களில் அமைந்திருப்பதாகச் சாதாரணமாக நம்பப்பட்டு வருகிறது. தாவரங்களின் உயிர் இயக்கத்துக்கு இன்றியமையாத பல பொறுப்புக்களை இவ்வண்ணங்கள் நிர்வகித்து வருகின்றன என்னும் உண்மை கடந்த இருபது வருஷ ஆராய்ச்சியின் விளைவாக வெளியாகியிருக்கின்றது.

## க்ஷயரோகத்துக்கு மருந்து

கதிரவனின் பொசுக்கும் கிரணங்களில் ஒளிந்திருக்கும் ஒளிச் சக்தியை இரசாயன சக்தியாக மாற்றி, சர்க்கரை போன்ற பொருள்களைச் செய்துகொள்ளத் தாவரங்களுக்கு 'க்ளோரோபில்' என்ற பச்சை நிறசாயம் எவ்வாறு உதவுகின்றதோ, அவ்வாறே காரடீன், க்ஸாந்தோபில், ப்ளாவனாய்ட்ஸ் போன்ற மஞ்சள், ஆரஞ்சு, ஊதா, சிவப்பு நிறமுடைய இரசாயனப் பொருள்கள் தாவ

ரங்களின் சுவாசக் கருவிகளாக வேலை செய்கின்றன. இத்தகைய முக்கியத்துவம் வாய்ந்த ப்ளாப்ஹேய்ட்ஸ் என்னும் தாவரச் சாயங்களின் ஆராய்ச்சிதான் சேஷாத்திரியின் 'ஸ்பெஷாலிட்டி'. இதைத் தவிர காட்டு மரங்களின் பட்டையிலும், இலைகளிலும் அடங்கியிருக்கும் சில அபூர்வ ரசாயனப் பொருள்களை சேஷாத்திரி கண்டுபிடித்திருக்கிறார். பாசி வகையைச் சேர்ந்த 'லிச்சன்ஸ்' என்னும் தாவரங்களிலிருந்து க்ஷயரோக சிகிச்சைக்கு உதவும் 'உஸ்னிக் ஆஸிட்' எனும் மருந்தைச் சுத்தமாகப் பிரித்தெடுத்து அதன் தன்மைகளை விளக்கியிருக்கிறார்: 'நூக்ளியர் ஆக்ஸிடேஷன்' என்ற ஒரு வழியை நிறுவி ஆன்தோஸையனின் மாளகத்தின் செயற்கைச் சிருஷ்டியை மிகவும் இலேசில் கையாளும்படி அமைத்திருக்கிறார்.

## சாயங்களின் ஆராய்ச்சி

இரசாயனம் சிந்தனை சக்தியைத் தூண்ட உதவும் ஓர் அரிய கருவி என்பதைக் கடந்த இருபத்தி ஆறு வருஷங்களில் பல்லாயிரக் கணக்கான கல்லூரி மாணவர்களின் உள்ளங்களில் பதியும்படி மிக அழகாகவும் தெளிவாகவும் அவர் பல அரிய சொற்பொழிவுகளை நிகழ்த்தியிருக்கிறார். எந்தக் கடினமான விஷயத்தையும் எளிதில் புரிந்து கொள்ளும்படி செய்யும் வாக்கு வல்லமை; அங்கங்கே உயர்ந்த நகைச்சுவை நிரம்பிய நிகழ்ச்சிக் குறிப்புகள், பெயரும் புகழும் பெற்ற இரசாயனிகளின் வாழ்க்கைக் கதை: அவ்வப்பொழுது மெய் சிலிர்க்கும்படி வருணிப்பது. இவைதான் பேராசிரியர் கையாளும் போதனை 'முறைகள்.

அவர் பாடம் நடத்தும் முறையே ஒரு தனி அழகுடையது.

1955ல் பெர்க்கின் என்னும் ஆங்கில இரசாயனியின் நூற்றாண்டு விழா உலகமெங்கும் கொண்டாடப்பட்டது. அப்பொழுது அந்த மேதையின் சாதனைகளை ஆராய்ந்து 'என்டவர்' என்னும் பத்திரிகையில் ஸர் ராபர்ட் ராபின்ஸன் ஒரு போற்றுரை வரைந்திருந்தார். பெர்க்கினிடம் ரசாயனக் கல்வி பெற்று அவ்வழியே தோன்றிய விஞ்ஞானிகளின் பரம்பரை ஜாபிதா ஒன்று அக்கட்டுரையில் தொகுக்கப்பட்டிருந்தது. அந்தத் தொகுதியில் இடம் பெற்ற இரண்டே இந்தியர்களில் ஒருவர் பேராசிரியர் சேஷாத்திரி. மற்றவர் தற்போது பூனா தேசிய இரசாயன மன்றத்தின் தலைவராகப் பணியாற்றும் டாக்டர் கே. வெங்கடராமன். ஸர் ராபின்ஸன் சேஷாத்திரியின் ஆசிரியர். தமது சீடன் சேஷாத்திரியின் ஷஷ்டியப்த பூர்த்தி விழா சிறப்பு மலரில் ராபின்ஸன் கூறுகிறார்: ''ஆராய்ச்சிகள் நடத்துவதில் ஒரு தனிப்பட்ட திறனையும் உற்சாகத்தையும் கொண்ட சேஷாத்திரியின் சாதனைகளை உலகம் போற்றுகிறது. ஆரம்பத்திலிருந்தே அவரது வளர்ச்சியையும் முன்னேற்றத்தையும் கண்டு நான் இன்புற்று வந்திருக்கிறேன். என் லாபரட்டரியில் அவர் படித்து வருகையில் சேஷாத்திரி ஆரம்பித்த ஒரு குறித்த ஆராய்ச்சி வழி மிக உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தது. அவ்வழியைப் பின்பற்றியதால் ஆன்தோஸையனின் சாயங்களை யொட்டிய ஆராய்ச்சி இன்று மிகவும் பிராபல்யம் அடைந்திருக்கிறது.'' ஓர் ஆசிரியர் தமது மாணாக்கனுக்கு மனமுவந்தளிக்கும் பாராட்டுதல் இது. சேஷாத்திரியின் சாதனைகளை மதிப்பிடுவதற்கு இந்தப் பாராட்டு ஒன்றே போதுமானது.

சுருங்கக் கூறினால், இரசாயன ஆராய்ச்சி பரம்பரை யொன்றை நமது நாட்டில் நிறுவியவர் சேஷாத்திரி. ராமானுஜன், ராமன், கிருஷ்ணன் என்ற மும்மேதைகளை உலகத்துக்கு ஈன்றெடுத்த தமிழகத்தின் அரிய விஞ்ஞான பரம்பரையில் சேஷாத்திரியும் இடம் பெற்றுவிட்டார். அறுபத்தைந்து ஆண்டுகள் பூர்த்தியாகியும் சேஷாத்திரி தோற்றத்திலும் ஊக்கத்திலும் வாலிபப் பொலிவில் இருப்பது சிறந்த கட்டுப்பாடுடன் நடத்தப்படும் அவரது அன்றாட வாழ்க்கையின் எடுத்துக்காட்டாகும். இன்னும் அரிய இரசாயன ஆராய்ச்சிகளில் ஈடுபட்டு, மேலும் பல சிஷ்யர்களை நாட்டுக்கு அளிக்கும் பொருட்டு அவர் நீடூழி வாழப் பிரார்த்திப்போமாக!

# சித்திரக் களஞ்சியம்

## குழந்தைக் கல்வி!



உலகப் பெரியாராகிய ஐன்ஸ்டீன் சிறு குழந்தைகளுடன் பழகும்பொழுது குழந்தையாகவே ஆகிவிடுவார். ஒரு நாள் சிறு குழந்தை ஒன்று தாய் தந்தையரிடம் சொல்லிக்கொள்ளாது, வீட்டை விட்டுச் சென்றுவிட்டது. தாய் அங்குமிங்கும் தேடினாள்; காணவில்லை. சிறிது நேரம் கழித்துக் குழந்தை வீட்டுக்கு வந்து சேர்ந்ததும் "எங்கே சென்றாய்?" என்றாள் தாய். "அதோ! 112-ம் எண் கட்டிடத்தில் ஒரு பெரிய கணித ஆசிரியர் இருப்பதாகக் கேள்விப்பட்டேன். அவரிடம் போய்ப் பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயர் கொடுத்த வீட்டுக் கணக்கைச் செய்துகொண்டு வந்தேன்" என்று குழந்தை பதில் கூறியது. இதைக் கேட்டதும் தாய்க்கு விஷயம் விளங்கிவிட்டது. ஓடோடிச்சென்றாள் ஐன்ஸ்டீனிடம். மன்னிக்குமாறு வேண்டினாள்.

அதற்கு உலகப் பேரறிஞர் ஐன்ஸ்டீன் பின்வருமாறு பதில் கூறினார்: "மன்னிக்க வேண்டிய விஷயம் ஒன்றுமில்லையே. குழந்தை என்னிடமிருந்து கற்றுக்கொண்டதைவிட நான் குழந்தையிடமிருந்தல்லவோ அதிகமாகக் கற்றுக் கொண்டேன்!"

ஆதாரம்: உலக மேதைகள்
தகவல்: புலவர் கோவை வாணன்



பின்னணிப் பாடகி: என்ன மிஸ் கமலா! என்னிடமிருந்து இரவல் வாங்கினதை என்னிக்குத் திருப்பித் தரப் போறீங்க!

நடிகை: ஆச்சரியமாயிருக்கே! உங்களிடமிருந்து நான் என்ன இரவல் வாங்கினேன்?!"

பின்னணிப் பாடகி: என் குரலை இரவல் கொடுத்தேனே!



"உங்களைத்தான்! ஹனி'மூன்' ஹனி 'ஸன்' அடிச்சிண்டிருக்கு சீக்கிரம் ஒரு டாக்ஸியைத் தேடிப் பிடியுங்கோ! ஹனி மூனுக்கு வெயில் பிளவா பண்ணுக்குக் காத்திண்டிருப்பானோ!"





விடுதலை! பரீட்சையிலிருந்து விடுதலை!

தற்கொலை செய்து கொண்ட குற்றத்திற்காக மாணவர்களுக்கு இங்கேயும் பரீட்சை எழுதும் தண்டனை விதிக்கிறோம்!

இதென்ன! யமலோகத்திலும் பரீட்சையா?

போன உயிர் எப்படித் திரும்ப வந்தது?

## என்ன கருமி!

"என்ன சார்? தலையைச் சொறிகிறீர்கள்? என்ன வேணும்!"

"சார்! எனக்குத் தொண்ணூற்றி ஒன்பது ரூபாய் தொண்ணூறு பைசா தேவையாயிருக்கு. தருகிறீர்களா?"

"நூறு ரூபாய் முழுசாகக் கேட்பதுதானே, ஐயா! எதற்கு இந்தச் சொச்சம், மீதியெல்லாம்!"

"உங்களை ரொம்பச் சிரமப்படுத்தக் கூடாது பாருங்கோ! என்னிடம் பத்து பைசா இருக்கு. மீதியை நீங்க தந்தால் போதும்!"

சலவைக்கு சலவை...

# துணிகளுக்கு அதிக ஒளியூட்டுவது




மேம்பாடடைந்த, புதிய ஸன்லைட்! ஒரு முறை வெள்ளோட்டம் பார்த்தீர்களானால் வெட்டவெளிச்சமாகத் தெரியும் அதன் மேன்மை! உண்மை, சலவைக்கு சலவை உங்கள் துணிகளுக்கு அதிக ஒளி. சிறிதே தேய்த்தாலும் செழுசெழுவென்று கொழிக்கும் நுரை...தூய்மை ஓங்க வெளுத்து, ஒளி நிரக்க உதவும்! உங்கள் துணிகள் அனைத்துக்கும் உபயோகியுங்கள்: மேம்பாடடைந்த புதிய ஸன்லைட் சோப்.

**உங்கள் அன்றாடத் துணிகளின் சலவைக்குரியது**

**மேம்பாடடைந்த, புதிய ஸன்லைட்**

லின்டாஸ்-S.38-140 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

# நாய் ஜாக்கிரதை

சாமா





1. எல்லோரும் நாய் வளர்க்கிறார்கள். நாமும் ஒரு நாய் வளர்க்க வேண்டும் என்று ஆசைப் பட்டான் பாலு.

2. கோடைக்கானலிலிருந்து ஒரு நாய் தருவிக்கப்பட்டது. அது 'புல்டாக்' என்று அவனுக்குத் தெரிவித்தார்கள்.

## பாப்பா மலர்





3. 'புல் டாக்'தானே, புல் போட்டு வளர்த்து விடலாம் என்று நினைக்க முடியவில்லை. அதனுடைய பசியும் கோபமும் யாருக்கும் புரியவில்லை. எதையும் அந்த நாய் தின்றது.

4. யார்மேல் கோபம் காட்டுவது, யாரிடம் சாந்தமாக இருப்பது என்பதைப் பற்றியே அது கவலைப்படவில்லை. ஏன், பாலுவிடமே சீறியது.






5. பயந்த பாலு ஒரு மரத்தின் மீது ஏறிப் பதுங்கினான். இச் சமயத்தில் அப்பா இல்லையே என்று ஏங்கினான். 'உம்! அப்பா இருந்தால் என்ன? அவரும் இன்னொரு மரத்தின் மேல் இருக்கப் போகிறார்' என்று நினைத்தான். நாய் அவன் எப்போது கீழே இறங்குவான் என்று...

6. ...எதிர்பார்த்திருந்தது. அந்தச் சமயத்தில் 'நாய் ஜாக்கிரதை' போர்டை எடுத்துக் கொண்டு பெயிண்டுக்காரர் வந்தார். நாய் பாலுவை விட்டு விட்டு அவர்மேல் பாய்ந்து துரத்தியது. நல்ல சமயத்தில் வந்து காப்பாற்றியதற்காகப் போர்டு எழுதி வந்தவரைப் பாலு வாழ்த்தினான்.




'சளக் – சளக்' என்ற சத்தத்துடன் தொட்டியிலிருந்து தண்ணீர் குடிக்கும் தன் வண்டிக் குதிரையைப் பார்த்தவாறு உட்கார்ந்திருந்தான் முனியன். தார்க் குச்சி அவன் காலடியில் கிடந்தது. குதிரையின் வாயிலிருந்து ஓடி வந்த கடிவாளத்தினுல் நுரையும் பசையுமாக வந்து கொண்டிருந்தது. தொட்டியிலிருந்து தலையை நிமிர்த்தி ஒரு முறை பெருமூச்சு விட்டுக் குதிரை தலையை ஆட்டிப் பக்கத்தில் வந்து தொந்தரவு கொடுத்த ஈயை விரட்டியது. இரண்டு வருடங்களுக்கு முன் கொழு கொழுவென்றிருந்த குதிரை இப்பொழுது எலும்பும், தோலுமாக இருப்பதைப் பார்க்கவே பிடிக்கவில்லை முனியனுக்கு. இரண்டு மைல் சவாரி போவதற்குள் களைத்து விடுகிறது. போகும் வேகமோ மிகக் குறைவு. மற்ற வண்டிக்காரர்கள், 'முனியன் வண்டி பின்னோக்கித் தானே போகும்!' என்று கேலி செய்வது இப்பொழுது வழக்கமாகி விட்டது. ரயில்வே ஸ்டேஷனுக்குப் போக வேண்டியவர்கள் முனியன் வண்டியைக் கூப்பிடுவதே கிடையாது. அவனுக்கு நிரந்தரமான ஒரு வாடிக்கைக்காரர் பக்கத்துத் தெரு காதர் சாயபுதான். அவருக்கு உடல் அசையாமல் தலையணையைப் போட்டுப் படுத்துக் கொண்டு ஆஸ்பத்திரிக்குப் போய் வர அவன் வண்டி தான் வசதியாக இருந்தது. சுருக்கமாகச் சொன்னுல் இந்த இரண்டு வருடங்களாகவே அதாவது வீட்டு மனிதர்களுக்கு விருப்பமில்லாமல் ஆண்டாளுவைக் கலியாணம் செய்து கொண்டதிலிருந்து அவனுக்குக் கஷ்ட காலம்தான். வீட்டுக்கு வரும் பெண்கள் அதிருஷ்டத்துடன் வந்தால் நல்லது. அதில்லாமல் ஆண்டாளுவைப் போல் துக்கிரியாக வந்து விட்டால் அதோகதிதான். இப்படியெல்லாம் ஓடியது அவன் சிந்தனை.

அன்று தெரு வழியாக வண்டி ஓட்டிப் போகும் போது, வேலாயுதன் மிலிட்டரி ஹோட்டலுக்குப் பின்பக்கமுள்ள அறையின் ஜன்னல் வழியாக அழகு முகத்தைக் காட்டும் அதே ஆண்டாளுதானு இவள்?' என்று கூட நினைக்கத் தோன்றியது. முன்பெல்லாம் அந்த வழியாகப்போகும்போது, 'வேலாயுதன் மிலிட்டரி ஓட்டல்' வந்ததும் குதிரையை மெதுவாகப் போக லகானைப்பிடித்து வைத்துக் கொண்டாலும், விஷயம் புரியாத குதிரை துள்ளு நடை போட்டு ஓடி விடும். அவன் குதிரை வண்டியின் சலங்கைச் சத்தம் தெரு முனையில் கேட்டதும் அதை ஆண்டாளு புரிந்து கொண்டு ஜன்னலருகே வந்து நிற்பாள். மிலிட்டரி ஹோட்டல் வாசலில் ஆஜானுபாகுவாக முறுக்கு மீசையுடன் அவள் தந்தை வேலாயுதன் நிற்பதைப் பார்த்துவிட்டால் முனியனுக்கு ஜன்னல் பக்கம் திரும்பவே பயமாயிருக்கும்.

''என்னுங்க? இங்கேயே இப்படி உட்கார்ந்திட்டீங்களே! குதிரை தண்ணி இல்லாமல் தவிக்குது'' என்றபடி வெகு சிரமத்துடன் தொட்டியில் ஒரு குடம் தண்ணீரைக் கொண்டு வந்து ஊற்றினுள் ஆண்டாளு. ''பாழாய்ப் போன குதிரையும் வண்டியும்! என்ன பிழைப்பு இது?'' என்று நொந்து கொண்டான் முனியன். ''சாப்பிட வாங்க'' என்ற ஆண்டாளுவின் குரலுக்குப் பதிலாக, ''மன்னாரும் வரட்டுமே'' என்ருன். ''வரவர உங்களுக்கு அந்த மன்னாரின் சிநேகிதம் அதிகமாப் போச்சு. சாப்பாடு, காப்பி எல்லாம் அவனுக்கு நம்ம வூட்டிலே போடணும் என்று தலையெழுத்தா? நீங்க இந்தப் பயல் சிநேகிதத்தை விட்டாத் தான் உருப்படுவீங்க. வண்டியை ஓட்டிப் போய்ப் பாழ்மண்டபத்தருகே நிறுத்திட்டு, அந்த மன்னாரோட மூணு சீட்டு ஆடிப்

பொழுதைப் போக்கிட்டு வெறும் கையோட வீட்டுக்கு வந்தீங்க. குழந்தையும் பட்டினி. நானும் பட்டினி. நாம் சாப்பிடாவிட்டாலும் இந்த வாயில்லாப் பிராணியைப் பட்டினி போடுவது மகா பாபம். உங்களுக்கு மாரியாத்தாதான் நல்ல புத்தியைக் கொடுக்கணும்'' என்று ஆண்டாளு பேசிக் கொண்டிருந்ததை முனியன் கவனிக்கவே இல்லை.

இலையில் போட்டிருந்த சோற்றைக் குழம்பில் புரட்டி வெகு ஆவலாகச் சாப்பிட்டுக் கொண்டிருந்த மன்னார் ஒரு டம்ளர் தண்ணீரைக் குடித்துத் தன்னை ஆசுவாசப் படுத்திக்கொண்டு, ''இன்று மேலத் தெரு வழியாக வந்து கொண்டிருந்தேன். உன் மாமனார் கடையிலிருந்து வந்த 'பிரியாணி' யின் வாசனை மூக்கைத் துளைத்தது. கடையில் புகுந்து ஒரு பிளேட்டுப் பிரியாணி சாப்பிட வேண்டும் என்று ஆசை அடித்துக் கொண்டது. கிழவன் வேலாயுதன் மீசையை முறுக்கிக் கொண்டு வாசலில் நின்றிருந்ததைப் பார்த்ததுமே அங்கு போகும் எண்ணத்தைக் கைவிட்டு விட்டு நேராக வந்து விட்டேன். என்னைப் பார்த்தாலே கிழவருக்குக் கோபம் வந்து விடுகிறது. 'அந்த வண்டிக்காரப் பயல் சிநேகிதனுடா நீ?' என்று அவர் கேட்கும் பொழுதே என்னை அடித்து விடுவாரோ என்று தோன்றுகிறது. அவர் இரண்டாவது பெண்ணுக்குக் கலியாணமாம். மாப்பிள்ளைக்குத் தையல் வேலையாம். கலியாணம் வெகு விமரிசையாக நடத்தத் திட்டமிட்டிருக்கிறாராம்'' என்றான்.

''முதல் பெண்ணைத்தான் நான் ஒரு அசடு, காலணுச் செலவு வைக்காமல், காதல் கலியாணம் என்ற பெயரில் தாம்பாளத்தைக் கொட்டித் தாலியைக் கட்டி அழைத்துக் கொண்டு வந்து விட்டேன். இரண்டாவது பெண்ணுக்காவது கிழவன் செலவழிக்கட்டுமே'' என்றான் முனியன்.

மன்னார் சாப்பாட்டை முடித்துக் கொண்டு ''நான் சற்று வெளியே போய் விட்டு வருகிறேன். நீ மெதுவாகச் சாப்பிடு'' என்று சொல்லி விட்டு முனியனின் சட்டைப் பையிலிருந்து வெகு சுவாதீனமாக இரண்டு பீடியை எடுத்துக் கொண்டு வெளியே நடந்தான். பொங்கி வரும் கண்ணீரை வெகு சிரமப்பட்டு அடக்கிக் கொண்டாள் ஆண்டாளு.

கொஞ்ச நாட்களாகவே தன் கணவனுக்குத் தன்னைக் கண்டாலே பிடிக்கவில்லை என்றும், வீட்டில் சம்மதமில்லாமல் கலியாணம் செய்து கொண்டதற்காக வருத்தப்படுகிறான் என்றும் ஆண்டாளுவுக்கு நன்றாகத் தெரிந்திருந்தது. முனியன் குனிந்த தலை நிமிராமல் சோற்றைக் கையால் அளைந்து கொண்டிருந்தான்.

''என்ன யோசிக்கிறீங்க? நல்லபடியா எனக்குக் குழந்தை பிறந்த பிறகு நானும் எங்காவது வேலைக்குப் போகிறேன். பணம் சம்பாதிப்பது நம் கையில் தானே இருக்கிறது? கவலையை விட்டு விட்டுச் சாப்பிடுங்கள். இன்னும் கொஞ்சம் 'கறி' போடவா? உங்களுக்குப் பிடிக்குமே என்று முருங்கைக் கீரை செய்திருக்கிறேன்'' என்றாள் ஆண்டாளு.

''போதும், நிறுத்து உன் பேச்சை. பேச்சுக்கு ஒண்ணும் குறைச்சல் இல்லை. நீ இந்த வீட்டுக்கு வந்ததிலிருந்து எதுதான் உருப்பட்டது? வண்டி பேரிலே மார்வாடிகிட்டே நூறு ரூபாய் கடன் வாங்கியாச்சு. மன்னாருகிட்டேயும் நிறையக் கடன் வாங்கியிருக்கேன். இன்னும் உன் பிரசவம் வேறு






நல்ல காபி தயாரிக்க புத்தம்புதிய பொடியே ஆதாரம்.

# ப்ரூக் பாண்ட் காபி

எப்பொழுதும் புதியது.

மற்ற காபி பொடிகளுக்கும் ப்ரூக் பாண்ட் காபிக்கும் என்ன வித்தியாசம். ப்ரூக் பாண்ட் காபி உள்ள ஒரு பையை திறந்து பாருங்கள் — விஷயம் புரியும். அது அப்போதே அரைத்த காபிக்கொட்டையின் உண்மையான புது மணம் கமழும்.

பொறுக்கி எடுத்த காபிக்கொட்டைகளை பதமாய் வறுத்து, அரைத்து அவைகள் வீசும் இயற்கையான மணத்தை காற்றுப்புகாத அழகான ஸெலோபேன் பைகளில் அடைப்பதே ப்ரூக் பாண்டின் தனிச் சிறப்பு வாய்ந்தமுறை. இப்பொழுதே ப்ரூக் பாண்ட் காபி அருந்தி அதன் புத்தம் புதிய பூரணமான மணத்தை அனுபவியுங்கள்.

*நீங்களும் ப்ரூக் பாண்டும் சேர்ந்து ஒரு கோப்பை அருமையான காபி தயாரிக்க முடியும். அதன் புதுமையையும் நறுமணத்தையும் ருசித்து அனுபவியுங்கள்.*

92/BBC-6A TAM

ஆகவேண்டும். எல்லாருக்கும் பெண்டாட்டியைத் தாய் வீட்டுக்கு அனுப்பலாம் என்ற நிம்மதி உண்டு. நம் கலியாணத்தினால் எனக்கு என் வீடும் இல்லே; உனக்கு உன் வீடும் இல்லே என்றாச்சுது. எப்படியும் எனக்கு நிம்மதியே இல்லே'' என்று கையை உதறி விட்டு எழுந்து விட்டான் முனியன். சோற்றுப் பானையைப் பார்த்துக் கொண்டே ஆண்டாளு யோசனையில் ஆழ்ந்தாள். தன்னை எத்தனை அன்பாக வளர்த்தார் தந்தை? 'அவர் பேச்சைக் கேட்காமல் முனியனை மணந்து கொண்டு என்ன சுகத்தைக் கண்டோம்?' என்று நினைத்தாள். அந்த நினைவு எழுந்ததும் இரண்டு வருடங்களுக்கு முந்திய அவள் திருமண நாள் அவள் மனக் கண் முன் தோன்றியது. அன்று விடியற்காலை பக்கத்து வீட்டுக் கிழவியை அழைத்துக் கொண்டு யாருக்கும் தெரியாமல், தெரு முனையில் நிறுத்தியிருந்த முனியனின் குதிரை வண்டியில் உட்கார்ந்து முருகன் கோயிலுக்குப் போனதும் மலர்ந்த முகத்துடன் முனியன், வேல் முருகன் சந்நிதியில் கனத்த ரோஜா மாலையை அவள் கழுத்தில் போட்டதும் கிழவி, ''நீங்கள் ஆயிரம் காலம் வாழ முருகன் அருள் புரியட்டும்'' என்று வாழ்த்தியதும் அவள் நினைவுக்கு வந்தன. திரும்ப வண்டியில் வரும்போது முனியனைப் பார்க்கவே அவளுக்கு வெட்கமாக இருந்தது. இனம் புரியாத சந்தோஷத்துடனும், அப்பா என்ன சொல்வாரோ என்ற பயத்துடனும் கடை வாசலில் வந்து மாலையும் கழுத்துமாக ஆண்டாளு வண்டியிலிருந்து இறங்கியதும், கையில் ஆடு வெட்டும் அரிவாளுடன் வாசலில் காத்திருந்த தந்தை, ''அடி பெண்ணே! வண்டியிலிருந்து இறங்காதே; அந்த வண்டிக்காரப் பயலுடன் என் கண் முன்னிருந்து போய் விடு. இல்லேயேல், இருவரையும் இந்தக் கத்தியால் வெட்டித் தள்ளி விடுவேன். இந்த வேலாயுதன் மானத்துக்குப் பயந்தவன். இனி நீ எனக்கு மகள் இல்லே. வந்தவழியே திரும்பி விடு'' என்று இரைந்ததும், தனக்கு நேர்ந்த அவமானத்தைத் தாங்க முடியாமல் தன் கணவன் மார்பில் சாய்ந்து நிம்மதி தேட முயன்றவளே முனியன் அணைத்துக் கொண்டு, ''கவலைப்படாதே ஆண்டாளு. உன்னை நான் கைவிட மாட்டேன். நீயும் உனக்கு அப்பன் இல்லே என்று நினைத்துக் கொள்'' என்று சமாதானப்படுத்த முயன்றதும், தன் எஜமானனுக்கு நேர்ந்த அவமானத்தில் தனக்கும் பங்குண்டு என்பதை நிரூபிப்பதுபோல் வண்டியில் ஏறி உட்கார்ந்ததும், இதே குதிரை ரோசத்துடன் நாலு கால் பாய்ச்சலில் ஓடியதும் அவளுக்கு இன்று போல் தோன்றியது.

அன்று அப்படி ஆசையாக அழைத்து வந்தவன், இன்று எப்படி மாறிவிட்டான்?

மாரியம்மன் கோவிலுக்கு அருகே ஒரு சிறு வீட்டில் இருண்ட அறையில் செம்பகத்தின் மடியில் தலையை வைத்துப் படுத்திருந்தான் முனியன். செம்பகம் தலையில் வைத்துக் கொண்டிருந்த மருக்கொழுந்தும் அவன் வாயில் மென்றுகொண்டிருந்த வெற்றிலையின் வாசனையும் அவனுக்குப் போதை ஊட்டுவதாக இருந்தன. வெற்றிலையை விழுங்கிவிட்டு, ''ஆமாம், இன்று சினிமாவுக்குப் போகலாம். வண்டி கொண்டு வருகிறேன் என்றீர்களே, எங்கே வண்டி?'' என்று கேட்டாள் செம்பகம்.

''சினிமா எங்கே ஓடியா போவுது? நாளைக்குப் போகலாம். இங்கு நாம் பேசிக்கொள்வதைவிடச் சினிமாக் காதலர்கள் என்ன தான் காதல் மொழிகள் பேசிக்கொள்ள முடியும்?'' என்றான் முனியன்.

''இந்தப் பேச்சுக்கெல்லாம் நான் மயங்கி விடமாட்டேன். வரவர உங்கள் போக்கே என் அம்மாவுக்குப் பிடிக்கல்லே. நீங்க உங்க கையாலே எங்கிட்டே பணம் கொடுத்து எத்தனை நாள் ஆகுது?'' என்று சிணுங்கினாள் செம்பகம். முனியனுக்கு அவள் பேச்சு உண்மையாகவே பட்டது: செம்பகத்தை ஆதரிக்கத் தன்னைவிடப் பண வசதி உள்ளவர்கள் எத்தனையோ பேர்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பது அவனுக்கு நன்றாகத் தெரியும். ஏன், மறைமுகமாக மன்னாரே செம்பகத்திடம் பேசத் துடிப்பதை அவன் கவனிக்கத் தவறவில்லை. இந்த ஒரு விஷயத்தில்தான் அவனுக்கு மன்னாரிடம் கோபம். தான் செம்பகத்தைப் பார்க்கப் போகும் போது அவனும் கூட வந்து விடுவான்; வாசல் திண்ணையில் செம்பகத்தின் அம்மாவுக்கு வெற்றிலே பாக்கு இடித்துக் கொடுத்துக் கொண்டே அரட்டை அடித்துக் கொண்டிருப்பான். அறைக்குள் செம்பகத்திடம் முனியன் இரண்டு வார்த்தை பேசுவதற்குள், ''முனியா, முனியா'' என்று குரல் கொடுத்து, 'அதோ தெரு முனையில் மப்டியில் போலீசுக்காரர் வருகிறார். நீ அவர் கண்ணில்பட்டால் உன்னை உதைத்து ஜெயிலுக்குள் தள்ளிவிடுவார்; இப்படி இரவில் இந்த மாதிரி வீட்டுக்கு வருவதெல்லாம் சட்டவிரோதம். மரியாதையாக வந்துவிடு' என்று அழைத்துக் கொண்டு போய்விடுவான். இதெல்லாம் செம்பகத்திடம் அவனுக்கு இருக்கும் ஆசையால்தானே? இன்று மன்னாருக்குத் தெரியாமல் எப்படியோ தப்பித்துக் கொண்டு செம்பகத்தின் வீட்டுக்கு வந்த அவன் சாமர்த்தியத்தை அவனாலேயே மெச்சிக்கொள்ளாமல் இருக்க முடியவில்லை. மன்னாரிடமிருந்து வாங்கிய பத்து ரூபாய் நோட்டொன்றை மகிழ்ச்சியுடன் அவள் கையில் கொடுத்தான்.

வெளியே இருந்து பழக்கமான மன்னாரின் சீட்டியடிக்கும் குரல் கேட்டது. வழக்கம்போல் ஏதோ சாக்குச் சொல்லி முனியனை இழுத்துக் கொண்டும் போய்விட்டான்

பொழுது விடிந்ததுமே மழை இலேசாகத் தூறிக்கொண்டிருந்தது. படுக்கையிலிருந்து எழுந்திருக்கும்போதே ஆண்டாளுவுக்கு இலேசாக வயிற்றை வலித்துக் கொண்டிருந்தது. வாசல் திண்ணையில் வண்டியின் பேரில் பணம் கடன்கொடுத்திருந்த மார்வாடிகையில் பிரம்பும், வாயில் வெற்றிலையுமாக உட்கார்ந்திருந்தான். அவன் உட்கார்ந்திருந்த தோரணை 'இன்று பணத்தை வாங்கிக் கொண்டுதான் போவேன்' என்று சொல்லாமல் சொல்லுவது போல் இருந்தது. இரவு வெகு நேரம் கழித்து வீட்டுக்குத் திரும்பிய முனியன் கயிற்றுக் கட்டிலில் தளர்ந்து படுத்திருந்தான். வாசல் தெளிக்கத் தண்

லிருடன் வந்த ஆண்டாளுவுக்கு மன்னாரைப் பார்க்கவே கோபமாக வந்தது. குடியைக் கெடுக்க வந்தவன், தன் கணவனுக்கு வேண்டாத பழக்கங்களைப் பழக்கி அவனைக் கடனாளியாக்கிய கயவன் என்றெல்லாம் மனத்துக்குள் அவனைச் சபித்தாள். முனியன் எழுந்ததும் மார்வாடி அவனிடம் பணம் கேட்டுச் சண்டை போட்டான்: 'பணம் தராவிட்டால் குதிரையையும், வண்டியையும் நான் எடுத்துப் போய்விடுவேன். பிறகு உன் உழைப்பே போய்விடும்' என்று மிரட்டினான் மார்வாடி. மன்னார் எல்லாவற்றையும் பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருந்துவிட்டு ''நான் இதோ வந்துவிடுகிறேன்'' என்று வெளியே போனான். அரைமணி நேரத்தில் திரும்பி வந்த மன்னார் ஒரு நூறு ரூபாய் நோட்டை முனியனிடம் கொடுத்து மார்வாடியை அனுப்பும்படி கூறினான். சமயத்துக்கு உதவிய மன்னார் தெய்வமாகவே தோன்றினான் முனியனுக்கு. பொழுது ஏற ஏற ஆண்டாளுக்கு இடுப்பு வலி அதிகமாகிவிடவே அவளை வண்டியில் ஏற்றி ஆஸ்பத்திரிக்கு அழைத்துப் போனான் முனியன்.



''மகாபலிபுரம் கடற்கரை மணலிலே பகல் பன்னிரண்டு மணிக்கு நீங்கள் ஓடிப் பிடித்து ஆடிப் பாடும் காதல் காட்சி ஷூட்டிங். அதற்கு.....

''இதில் ஏதோ சூது வஞ்சனை இருக்கு! நான் வர மாட்டேன்!''

முனியன் எதுவும் பதில் சொல்லவில்லை. அவனுக்கும் இதெல்லாம் தெரியாமலில்லை. ஆனால் மன்னாரைத் தவிர இப்பொழுது வேறு யாரும் உதவிக்கு இல்லை என்றபடியால் எதுவும் செய்ய முடியவில்லை. தந்தையிடம்போய் அவர் காலில் விழுந்து, ''செய்த பிழையை மன்னித்துவிடுங்க'' என்று கேட்டால் என்ன? என்று ஒரு சமயம் நினைப்பாள். ஆனால் கம்பீரமும், கண்டிப்பும் நிறைந்த அவர் உருவத்தை நினைத்தாலே அவரை அணுகப் பயமாக இருக்கும் அவளுக்கு. தன் தங்கைக்கு வெகு விமரிசையாகக் கல்யாணம் நடந்து அவள் சுகமாக வாழ்கிறாள் என்ற செய்தி ஆண்டாளுவின் செவிகளுக்கும் எட்டியிருந்தது.

குழந்தை பிறந்த நேரம் என்றுதான் சொல்ல வேண்டும். முனியன் ஜுரமாகப் படுத்துவிட்டான். கைக்குழந்தையுடன் கணவனையும் கவனிக்க அரும் பாடுபட்டுக்கொண்டிருந்தாள் ஆண்டாளு. மன்னார்தான் வண்டியை ஓட்டிக் கிடைக்கும் காசை முனியன் வீட்டுக்கு உதவி வந்தான். படுக்கையில் விழுந்ததிலிருந்து முனியன் குணமே மாறி விட்டது என்றுதான் சொல்ல வேண்டும். எதற்கெடுத்தாலும் எரிந்து விழுந்தான். மன்னாரைக்கூடக் காரணமில்லாமல் கோபித்துக்கொண்டான். ஆண்டாளு கஞ்சி வைத்துக் கொடுத்தால், காப்பி வேணும் என்பான் முனியன். இப்படி இல்லாததைக் கேட்டு அவளை அலைக்கழிப்பான். இதையெல்லாம் பார்த்துக் கண் கலங்குவாள் ஆண்டாளு.

அன்று முனியன் மிகவும் பலஹீனமாக இருந்தான். கட்டிலருகே உட்கார்ந்து ஆண்டாளு அவன் காலைப் பிடித்து விட்டுக் கொண்டிருந்தாள். குழந்தை தூளியில் தூங்கிக் கொண்டிருந்தது. கணவனிடம் மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தாள் ஆண்டாளு. அக்கம்பக்கத்தில் உள்ளவர்கள் தன்னையும் மன்னாரையும் பற்றி ஒருவிதமாகக் கதை பேசுவதாகவும், இவன் எதற்காக இந்தக் குடும்பத்துக்கு உதவுகிறான் என்ற கேள்விக்குப் பதில் சொல்ல முடியவில்லை என்றும் வருத்தத்துடன் சொன்னாள்.

ஒரு நாள் பக்கத்து வீட்டுக் கிழவியிடம் தன் நிலையைச் சொல்லிக் கணவனுக்கு வைத்தியம் பார்க்க ஏதாவது உதவி கேட்டு வருமாறு தந்தையிடம் அனுப்பினாள்.

விஷயத்தைக் கேட்டதும் வேலாயுதன் துள்ளிக் குதித்தாராம். ''அந்தப் பெண் எப்படிப் போனால் எனக்கென்ன? வீட்டுக்கு வேண்டாத பெண்ணைப் பற்றிப் பேசாதே. என்வரையில் அவள் இறந்துவிட்டாள்'' என்று வேலாயுதன் சொன்னதைக் கிழவி கூறியதும் ஆண்டாளு முகத்தை மூடிக் கொண்டு அழுதாள். இப்படியும் ஒரு கல் நெஞ்சம் படைத்த மனிதன் உண்டா என்று பொருமினாள்.

நாளுக்கு நாள் முனியனின் நோய் முற்றிக் கொண்டே வந்தது. மன்னார் எத்தனையோ வைத்தியம் செய்தும் ஒன்றும் பயன்படவில்லை. சரியான கவனிப்பில்லாமல் குதிரையும் மிகவும் சோர்ந்து, இளைத்து மெலிந்து பார்க்கவே பரிதாபமான நிலையில் இருந்தது. கிடைத்த விலைக்கு வண்டியை விற்றுவிட்டான் மன்னார். குதிரையை யாரும் வாங்க முன்வரவில்லை. 'இதை வாங்கினால் இதைப் புதைக்கவல்லவா முதலில் இடம் தேட வேண்டும்' என்று சொல்லி விட்டார்கள். குதிரை மட்டும் ஆண்டாளுவுக்குப் பாரமாக வாசலில் நின்று கனைத்துக் கொண்டிருந்தது.

படுக்கையில் எலும்பும் தோலுமாக எமனுடன் போராடிக் கொண்டிருந்த முனியனும் தனது கடந்த கால வாழ்க்கையை நினைத்துப் பார்த்தான்.

ஆண்டாளுவைக் கலியாணம் செய்து கொண்டு அவளை ஒரு நாள் கூடச் சந்தோஷமாக வாழவிடவில்லை. தான் படுக்கையில் உயிருடன் இருக்கும்போதே பக்கத்து வீட்டுக்காரர்கள் ஆண்டாளுவையும், மன்னாரையும் பற்றிப் பேசிச் சிரிப்பது முனியனுக்கு நன்றாகத் தெரிந்தது. தான் இறந்துவிட்டால்

# ஸாத்தே

## பிஸ்கெட்கள்



## ருசிக்கு ஈடு இணை இல்லாதவை!

ஸாத்தே பிஸ்கெட்களை சுவை
க்கும்போது ஆகா, என்ன அலாதி
ருசி, என்ன ஆனந்தம்! மால்ட்
எக்ஸ்ட்ராக்ட் மற்றும் பால்
கொண்டு தயாரான இந்த
பிஸ்கெட்கள் நோய்க்குப்
பிறகு உடல் தேறுபவர்க
ளுக்கும் வளரும் குழந்தை
களுக்கும் சாலச் சிறந்த
உணவு! ஸாத்தே
பிஸ்கெட் & சாக்
லேட் கம்., லி.,
பூனா–2

பிறகு ஆண்டாளுவும் குழந்தையும் எப்படிக் காலம் தள்ளுவார்கள்? தன்னால் அவளுக்குக் கஷ்டமே தவிர சுகம் இல்லை. இளமைத் துடிப்பில், ஒரு கண நினைப்பில் மற்ற சிந்தனைகள் ஒன்றும் இல்லாமல், 'காதலை' மட்டும் பெரிதாக மதித்து, நாட்டையும் வீட்டையும் பகைத்துக் கொண்டதன் பலன் எத்தனை பயங்கரமானது? வெட்கத்தையும் மானத்தையும் விட்டு மன்னாரிடம் ''ஒரு முறை வேலாயுதனைப் பார்க்க வேண்டும். அவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு ஆண்டாளுவை அவரிடம் ஒப்படைத்தால்தான் என் ஆத்மா சாந்தியடையும். அவரை அழைத்து வா. கடைசிக் காலத்தில் என் பேச்சை அவர் தட்ட மாட்டார் என்று நினைக்கிறேன்'' என்றான் முனியன். மன்னாருக்குக் கூட அவன் பேச்சு கண்ணில் நீரை வரவழைத்து விட்டது. இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த ஆண்டாளு முனியனின் கழுத்தைக் கட்டிக் கொண்டு, ''வேண்டாம் அத்தான். நீங்கள் எனக்காக யாரிடமும் மன்னிப்புக் கேட்க வேண்டாம். இது வரையில் நீங்கள் ஆண் சிங்கம் போல நிமிர்ந்த தலையுடன் தான் வாழ்ந்திருக்கிறீர்கள். நீங்கள் என் அப்பாவிடம் மன்னிப்புக் கேட்க நான் ஒரு நாளும் ஒப்புக் கொள்ள மாட்டேன். வயிற்றில் பிறந்த பெண்ணின் பேச்சையே நெஞ்சைக் கல்லாக்கிக் கொண்டு நிராகரித்த மனிதர் மாப்பிள்ளையின் பேச்சுக்கு இரங்குவாரா? இதோ பாருங்கள், மன்னாரு, என் தாலி மீது ஆணை. நீங்கள் இவர் பேச்சைக் கேட்டுக்கொண்டு என் அப்பாவிடம் மத்தியஸ்தம் பேசப் போகாதீர்கள். என் கணவன் மானம் தான் எனக்குப் பெரிசு'' என்று மன்னாரைத் தடுத்துவிட்டாள்.

நேரம் ஓடிக் கொண்டேயிருந்தது. அணையப் போகும் விளக்கைப் போல் முனியனின் முகத்தில் ஒரு தெளிவு கண்டது. ஆண்டாளு கணவன் முகத்தைப் பார்த்துக் கொண்டே உட்கார்ந்திருந்தாள். தண்ணீர் வேண்டும் என்று ஜாடை காட்டினான் முனியன். வெந்நீர் எடுத்து வருவதற்குள் முனியனின் ஆவி பிரிந்து விட்டது. திறந்த வாயுடன், மேல் முகட்டைப் பார்த்தவாறு கிடந்த முனியனைக் கண்டு 'ஓ' வென்று அலறினாள் ஆண்டாளு. மன்னார் கண்ணீர் வடித்துக் கொண்டே அவளுக்குச் சமாதானம் சொன்னான். விஷயம் தெரிந்ததும் தெருக்காரர்கள் வீட்டு வாசலில் கூடிவிட்டார்கள். ஆளுக்கு ஒரு விதமாகப் பேசிக் கொண்டார்கள். இதே சமயம் வாசல் கதவை அடைத்துக் கொண்டு வந்து நின்றது ஓர் உருவம். ஆண்டாளு தலை நிமிர்ந்தாள். அவள் கண்களையே அவளால் நம்ப முடியவில்லை. ஆம், மிலிட்டரி ஓட்டல் வேலாயுதம்தான் நின்று கொண்டிருந்தார். அவரைப் பார்த்ததும், ஆண்டாளு பெண் புலியாகத் துள்ளி எழுந்தாள். ''நீங்கள் எதற்காக இங்கு வந்தீர்கள்? அவர் — என் கணவர் உயிருடன் இருந்தபோது எங்களை வெறுத்துத் தள்ளியவர், அவர் இறந்ததும் என் அவல வாழ்க்கையை வேடிக்கை பார்க்க வந்திருக்கிறீர்களா? போய்விடுங்கள். இத்தனை நாளும் போல் என் வாழ்க்கையை இனிமேலும் நான் ஓட்டிக் கொள்ளுகிறேன். நீங்கள் மானமாக வாழுங்கள். மன்னாரு, நீங்களும் இருந்தவரையில் என் கணவரைக் கெடுத்து என் வாழ்க்கையை நரகமாக்கினீர்கள். இனிமேலாவது என்னை வாழ விடுங்கள். நீங்களும் போய்விடுங்கள்'' என்று கத்தினாள் ஆண்டாளு. வீட்டுக்குள் தெரு ஜனங்கள் வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தார்கள். யாரோ ஒரு குறும்பன், ''பார்த்தாயா, பத்தினி வேடம் போடறா: இப்போ நல்ல பேரு வாங்க மன்னாரை நம்ம எதிரிலே போய்விடு என்கிறா'' என்றான்.

மறுகணம் அவன் தாடையில் பளார் என்று ஓர் அறை விழுந்தது. அடித்தவர் வேலாயுதன்தான். ''டேய், என்னடா சொன்னாய் என் மகளைப் பற்றி? நான் அவளை ஆயிரம் சொல்லுவேன். அதற்காகக் கண்டவர்கள் என் மகளைக் கண்டபடி பேச நான் அனுமதிக்க மாட்டேன். எல்லோரும் கேட்டுக்குங்க. இந்த மன்னாரு வேறு யாருமில்லே, என் அண்ணன் மகன்தான்; ரொம்ப நாளா சிங்கப்பூரில் இருந்தான். ஆண்டாளு முனியனைக் கலியாணம் செய்துகொண்டது எனக்குப் பிடிக்கவில்லை என்றாலும், வெளியே நான் பகைமையுடன் பேசினாலும், என் மகள் மேலுள்ள பாசத்தை என்னால் கட்டுப்படுத்த முடியவில்லை. அதே சமயம் என் சுபாவத்தின்படி முரட்டுத்தனத்தையும் பிடிவாதத்தையும் விட்டுவிடவும் நான் தயாராக இல்லை. முனியனுக்குச் சீட்டு ஆடும் பழக்கம் மற்றபடி எத்தனையோ கெட்ட பழக்கங்களும் உண்டு என்று எனக்கு நன்றாகத் தெரியும். என் மகள் நன்றாக வாழ, முனியனைக் கெட்ட வழியிலிருந்து திருப்ப மன்னாரிடம் சொல்லியிருந்தேன். மன்னாரு அவன் உறவைச் சொல்லிக்கொள்ளாமல் முனியனின் சிநேகிதனாகவே நடித்து, அவன் போகும் இடங்களுக்கெல்லாம் உடன் போய்க் கூடியவரையில் அவனை நல்ல வழிக்குத் திருப்பிக் கொண்டிருந்தான். அவன் வேறு யாருடனும் சீட்டாடாமல் இருக்க மன்னாருவே அவனுடன் சீட்டாடிக் கிடைத்த பணத்தை அவனிடமே கடனாகத் திருப்பிக் கொடுத்துக் கொண்டிருந்தான். வண்டியை எடுத்துப் போக மார்வாடி வந்ததும் மன்னாரு என்னிடமிருந்துதான் பணம் வாங்கி வந்தான். இப்படி மறைமுகமாக என் மகளுக்கு வாழ்வளிக்கவே மன்னாருவை இங்கு அனுப்பியிருந்தேன். ஆகையால் என் மகளுக்கு மன்னாரு அண்ணன் முறையாக வேண்டும்'' என்றதும், ''அண்ணா, என்னை மன்னித்துவிடுங்கள்'' நான் உங்களைத் தவறாக எண்ணியிருந்தேன்'' என்றாள் ஆண்டாளு. ''தங்கச்சி, முதலில் நீ உன் அப்பாவிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள். அவர் உருவம் கல்லு. உள்ளம் வெல்லம். மறைமுகமாக அவர் உன்னைப் பற்றிக் கவலைப் பட்டது எனக்குத்தான் தெரியும்.'' என்றான் மன்னார்.

''அப்பா!'' என்று ஆண்டாளு வேலாயுதனின் காலடிகளில் விழுந்தாள். மகளை அணைத்துக் கொண்ட அந்த இரும்பு மனிதனின் கண்களிலிருந்து கண்ணீர் ஆறாகப் பெருகி ஓடியது.

# யாரை நம்ப முடிகிறது?

ஆர். எஸ். எஸ்.

பலராமன் சாவகாசமாகத் திண்ணையில் உட்கார்ந்திருந்தார். எதைப் பற்றியோ தீவிரமாக யோசனையில் ஆழ்ந்திருப்பவர் போலும் காணப்பட்டார்.

"உமக்கு மேலே உட்கார்ந்திருப்பவன் எப்போது ராஜிநாமா பண்ணுவான், அல்லது ரிடையர் ஆவான்? அந்த இடத்தில் எப்போது உட்காரலாம் என்று கணக்குப் போட்டுக் கொண்டிருக்கிறீரா?" என்று கேட்டுக் கொண்டே அவர் பக்கத்தில் போய் உட்கார்ந்தேன்.

பலராமனைச் சுலபமாகப் பேசவைக்க அவருடைய காரியாலய நினைவைக் கிண்டிவிட்டால் போதும். மனிதன் கடல்மடை திறந்த வெள்ளமாக ஆரம்பித்து விடுவார். அங்கிருந்து வேறு விஷயங்களுக்கு அவரைத் தாவ வைப்பது எளிது.

இன்று அவர் ஏமாற்றி விட்டார். "வாங்க! இந்தப் பாட்டில் பால் விநியோகிக்கிற பையன்கள் ஸ்டிரைக் பண்ணினாங்களே...." என்று வழக்கத்துக்கு விரோதமாகப் புது இடத்தில் பேச்சைத் தொடங்கினார்.

"அதனாலே வாடிக்கைக்காரர்களுக்கு அப்படி யொன்றும் நஷ்டமில்லையே! இரண்டடி நடந்தால் நல்ல பாலாகவே டிப்போவில் வாங்கி வர முடிகிறதே" என்றேன்.

"பாலைத் தூக்கி டிகாக்ஷனிலே கொட்டும் ஐயா! நான் அதைப் பற்றிக் கவலைப் படவில்லை. இந்தப் பசங்கள் பால் கொண்டு வராமல் வேலை நிறுத்தம் செய்ததில் என் வீட்டுக் கல்யாணமே நின்று போச்சே? தெரியுமா?" என்றார் பலராமன் படபடப்புடன்.

"நாலு புட்டிப் பாலோடு கல்யாணத்தை நடத்தி விடலாம் என்று நினைத்தீரா? அதே நாலு புட்டியை டிப்போவில் வாங்கலாமே?"

"விஷயத்தை விவரமாகக் கேட்டுத் தொலையும்" என்று ஆரம்பித்தார் பலராமன்: "நமது சேதுரத்தினத்தின் பிள்ளையாண்டான் பாலு இங்கே வந்து பெண் பார்த்து விட்டுத் திருப்தியையும் தெரிவித்து விட்டுப் போனதும் அதனாலே என் புத்திரி மோஹனாவின் திருமணத்தை 'ஜாம் ஜாம்' என்று சீக்கிரமே நடத்தித் தொலைத்து விடுவதாகவும் நாங்கள் பிளான் போட்டது உமக்குத் தெரிந்திருக்குமே! ஒரு பெரிய கவலை ஒழியப் போகிறது என்று நான் ஆனந்தப்பட்டுக் கொண்டிருந்தேனா? இந்தச் சமயத்தில்தானையா இந்தப் பாட்டில் பையன்கள் வேலை நிறுத்தம் பண்ணினாங்க! அதனாலே நம்மாலே காப்பி குடிப்பு நிறுத்தம் பண்ண முடியுமா? என் சம்சாரத்துக்கு உடம்பு கொஞ்சம் சரியாக இல்லை. மோகனா பாத்திரத்தைத் தூக்கிக் கொண்டு கிளம்பியிருக்கிறாள். பாலுவும் அங்கு வந்திருக்கிறான்.

'உங்களோடு சில வார்த்தைகள் அவசியமாகவும் அவசரமாகவும் பேசியாக வேண்டும். என்னவோ பெரியவர்கள் அவசரப்பட்டு இந்தத் திருமண விஷயத்தில் ஒரு தீர்மானத்துக்கு வந்து விட்டார்கள். ஆனால் நான் கொஞ்சம் ஆத்ம விசாரம் செய்து பார்த்ததில், நிச்சயமாக நான் உங்களுக்கு ஏற்றவன் இல்லை என்று தோன்றுகிறது. உங்களுக்கு என்னைவிடப் பன்மடங்கு அதிக உயர்வான பையன் அமைய வேண்டும். இந்த நிலையில் நான் ஒதுங்குவதுதான் முறை என்று தீர்மானித்து விட்டேன்' என்று கூறிவிட்டுப் பாலுப் பயல் சைக்கிளில் பறந்து விட்டான். சொப்பனத்திலே நடக்கிறமாதிரி பால் பாத்திரத்தோடு மோகனா திரும்பி வந்தாள். 'ஆஹா! அவர் ஒரு கனவான்! ஜெண்டில்மன்!' என்றபடியே. பெண்ணின் சமத்து எப்படி? அந்த இடம் நல்ல இடமாச்சே ஐயா! இவன் பால் வாங்கப் போகாமலிருந்திருந்தால், அவன் இவளைப் பார்த்துப் பேசாமலிருந்திருந்தால் இந்தக் கல்யாணம் தடைப்பட்டிருக்காதே!" பலராமன் சீறினார்.

"இந்தக் காலத்துப் பையன்களே இப்படித்தான்! அவன் மனசிலே வேறு யாரும் புகுந்திருக்கிறாளோ என்னவோ!"

"இருக்கட்டும், அந்தச் சேதுரத்தினம் ஒரு ரத்துக் கடிதம் எழுத வேண்டாம்? அந்தப் பாலு ஒரு அப்பாவிப் பயல் என்று தான் நான் நினைத்துக் கொண்டிருந்தேன்! இப்போ என்னடான்னா....." பேசத் தெரியாமல் பலராமன் நிறுத்தினார்.



"அவன் அயோக்கியன்! யார்கிட்டேயோ முன்னாலேயே வாக்குக் கொடுத்திருப்பான்!"

சேதுரத்தினம் மார்க்கெட் வாசலில் அவரைக்காய்க்காரனுடன் பேரம் பண்ணிக் கொண்டிருந்தார்.

"என்ன ஸ்வாமி! கல்யாணச் சாப்பாடு போட என்றைக்கு அழைப்பு விடப் போகிறீர்!" என்றேன்.

ஒரு விசுவாமித்திரப் பார்வையை வீசினார் சேதுரத்தினம். "கல்யாணமா? கோவிலிலே திருக் கல்யாணம் வரும். சொல்லியனுப்புகிறேன். இரண்டு பேருமாகப் போய்ப் பிரசாதம் வாங்கிச் சாப்பிடுவோம்!"

"இந்தக் காலத்துப் பையன்களே அப்படித்தான்! அவன் யாரைத்தான் காதலித்துத் தொலைத்திருக்கிறானாம்?

"வாட்! வாட்! என் பிள்ளையா? நாசமாப் போச்சு! காதலுக்கு ஸ்பெல்லிங் தெரியாது ஸ்வாமி அவனுக்கு! எல்லாம் அந்தப் பலராமன் பெண்ணுக்குத்தான் வெளிச்சம்! கல்யாணத்தை யெல்லாம் நிச்சயித்து விட்டோம்! ராபணன்னு அந்தப் பொண்ணு, 'தங்களுக்கு ஏற்றவள் நான் இல்லை! நான் ஏற்கனவே ஒருவரை மனத்தில் வரித்து விட்டேன்! தயவுசெய்து என்னை நிராகரித்துக் காப்பாற்றுங்கள்' என்று நாலைந்து நாட்களுக்குமுன் சினிமாக் கொட்டகை வாசலில் பார்த்துச் சொல்லி விட்டதாம்."

"இந்தக் காலத்துப் பெண்களே அப்படித்தான்! துணிந்தவர்கள்! விட்டுத் தள்ளுங்கள்! பலராமனுக்குக் கடிதம் எழுதி விட்டீர்களா?" என்றேன்.

"ஆமா! அவனை மதித்துக் கடிதம் வேறு எழுதி ஆறுபைசா நஷ்டமடையவேண்டுமா?"

"நோ! நோ! அப்புறம் அவரும் எதையாவது பதிலுக்குச் சொல்லி உங்களைமாட்டப் போகிறார்! சும்மா ஒரு கடுதாசியை நாலுக்காக எழுதிப் போட்டுவிடுங்கள்!" என்றேன்.

இரண்டு நாட்கள் கழித்து ஒரு நாள் காலை வேளை. அந்த வேளையில் பலராமன் வருவார் என்று நான் எதிர்பார்க்கவில்லை. "வாங்க! வாங்க" என்று உள் ஹாலில் நின்று அழைத்தேன். "நீர் இருப்பீரோ இருக்க மாட்டீரோ என்ற சந்தேகம்! நல்ல வேளை. இருந்து விட்டீர்" என்று சொன்னவர் வாசல் பக்கம் திரும்பி, "நீங்களும் வாருங்களேன்" என்றார். அது வரை கதவு மறைவில் இருந்த சேதுரத்தினமும் உள்ளே நுழைந்தார்.

"ஆஹா! என்ன ஆச்சரியம்! மாஜி சம்பந்திகள் இருவரையும் சேர்த்து வரவேற்கும் அதிர்ஷ்டமல்லவா எனக்குக் கிடைத்திருக்கிறது" என்றேன் உபசாரமாக.

"மாஜி என்கிற வார்த்தையை எடுத்துடும் ஸ்வாமி! இப்போது நாங்கள் சம்பந்திகளேதான். அதிகாரபூர்வமான அறிவிப்பு அடுத்த முகூர்த்தத்திலே வெளியாகும்" என்றார் சேதுரத்தினம்.

"பையன் மனசிலே இடம் காலி இல்லே. அது இது என்று பேச்சு வந்ததே" என்றேன்.

"அதெல்லாம் ரெண்ட் கண்ட்ரோல் கோர்ட்டிலே போய் 'வெகேட்' பண்ண ஆர்டர் வாங்கியாச்சு" என்றார் பலராமன்.

"நாங்க நாலு பேருமே ஒரு அரை மணி நேரம் உட்கார்ந்து ஒரு சின்ன 'செமினார்' நடத்தினோம். எத்தனை விஷயம் தெரிய வந்தது கேட்கிறீரா?"

"நீங்க அப்படிச் சந்தித்தே பேசிவிட்டீர்களா?" என்றேன் வியப்புடன் நான்.

"ஆமா! நாங்க சந்தித்தோம்! ஆனால் இந்தச் சந்திப்புக்குக் காரணமான பிரச்னை சம்பந்தப்பட்டவர்கள் இரண்டு பேருமே, பால் டிப்போ போகும் வழியிலோ, சினிமாக் கொட்டகை வாசலிலோ சந்திக்கவே இல்லையாம். இரண்டு பேரும் தங்களுக்குத் தனித் தனியே வந்த கடிதத்தில் கண்டபடி நடித்திருக்கிறார்கள்." — இது பலராமன்.

"பானு எழுதுவது போல் ஒரு கடுதாசி மோஹனுவுக்கு வந்தது. அதன் பிரகாரம் அவன் பானுவை வழியில் சந்தித்ததாகப் பலராமனிடம் சொல்லி யிருக்கிறான். மோஹனு எழுதுவது போல் பானுவுக்கு ஒரு கடிதம் வந்தது. அதன் பிரகாரம் அவள் அவனை சினிமாக் கொட்டகை வாசலில் சந்தித்ததாக என்னிடம் சொன்னாள்."—இது சேதுரத்தினம்.

"இரண்டு கடிதங்களிலுமே அவைகளை உடனே கிழித்தெறியும்படி குறிப்பு இருந்தது. இருவரும் அதை மாத்திரம் செய்யவில்லை. இரண்டு கடிதங்களின் எழுத்தும் ஒரே மாதிரி இருந்தது."—இது பலராமன்.

"அட, ராமசந்திரா!" என்றேன் நான்!

"அது மாத்திரமா? நீர் போன வருடம் கருவேலக் கிழங்கு லேகியம் பற்றி எனக்கு ஒரு நாட்டு வைத்தியக் குறிப்பு எழுதிக் கொடுத்தீரே! அந்த எழுத்தும் இந்தக் கடிதங்களில் காணும் எழுத்தும் ஒரே மாதிரி இருக்கு ஸ்வாமி!" என்றார் சேதுரத்தினம்.

"அபத்தம்! என் கையெழுத்து எனக்குக் காப்பிரைட்டா? என் மாதிரி எத்தனையோ பேர் எழுதலாம்! எனக்கெதற்குஇந்த வம்பு?"

"அன்றைக்கு மார்க்கெட்டிலே பேசிக் கொண்டிருந்தபோது 'அவரும் எதையாவது பதிலுக்குச் சொல்லி உங்களை மாட்டப் போகிறார். சும்மா ஒரு கடுதாசியை நாலுக்காக எழுதிப் போட்டுவிட்டு சும்மா இருங்கள்' என்று அழுத்திச் சொன்னீரே. அந்த வார்த்தைகள் என் மனத்தில் குடைந்து கொண்டிருந்தன. நாம் ஏன் பலராமனைச் சந்தித்து விளக்கம் கேட்கக் கூடாது என்று வெறியும் ஏற்பட்டது. அந்த வெறியில் உண்மை கிடைத்தது. நீர் பெரிய சதி செய்தீர். ஆனாலும் உம் வார்த்தைகளே உம்மைக் காண்பித்துக் கொடுத்து விட்டன" என்றார் சேதுரத்தினம்.

"இந்தா ஐயா! உம் பையனுக்கு மோஹனுவைத் திருமணம் செய்துகொடுக்க மாட்டேன் என்று கண்டிப்பாய்ச் சொன்னதற்காகத்தானே இந்தக் கலகப் பணியில் ஈடுபட்டீர்! இந்தச் சில்விஷம புத்தியை விட்டால் உம் பையனுக்கும் ஒழுங்காகக் கல்யாணம் நடக்கும். இல்லாத போனால் இது மாதிரி உம் விஷயத்திலும் கலவரக் கடிதங்கள் எத்தனை வருமோ?" என்று சொல்லிக் கொண்டே சேதுரத்தினம் பின் தொடரப் பலராமன் நடந்தார். நான் சிலையாக அவர்கள் போவதைப் பார்த்துக் கொண்டு நின்றேன்.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam.

# மக்ளீன்ஸ் பற்பசையின் புதிய புல்லரிக்கும் ருசியே சொல்லும் உங்களுக்கு, அது செயலாற்றுகிறதென்று !

## சுத்தமாக்க

—உங்கள் பற்களிலிருந்து
அந்த மங்கிய மஞ்சள்
திரையைப் போக்குகிறது

## வெண்மையாக்க

—அவைகளுக்கு அந்த
அதிகமான
வெண்மையைத் தருகிறது

## காக்க

—சொத்தைக்குக் காரணமான
கிருமிகளை நீக்கி உங்கள்
வாயைப் புத்துணர்ச்சியுடன்
சுத்தமாக வைக்கிறது.




**மக்ளீன்ஸ்—அதிவெண்மையான பற்களுக்கு**

MTP/I/P/1/65 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon